# கிருஷ்ண பரமாத்மா லீலைகள்





ஸ்ரீ சுவாமி சிவானந்தா

இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# கிருஷ்ண பரமாத்மா லீலைகள்


அருளியது :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

திரு. R. வரதராஜன், B. A., B. T.


சிவானந்தா நூற்றுண்டு விழா வெளியீடு





தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

விலை ] 1985 [ ரூ. 5—00

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனல் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புக்கள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் தொடரில் கிருஷ்ணபரமாத்மா லீலைகள் என்ற நூலை திரு. R. வரதராஜன், B. A., B. T. அவர்கள் மிக அற்புதமாக தமிழில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda

ॐ

# பொருளடக்கம்

# கிருஷ்ண பரமாத்மா லீலைகள்

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

---

| நெ. | பெயரும் விலாசமும் | | ரூபாய் |
|---|---|---|---|
| 1. | திரு A. S. தனுஷ்கோடி,<br>நவஜீவன் போட்டோ ஸ்டுடியோ,<br>தேனி, மதுரை Dt. | .... | 300 |
| 2. | திரு. S. K. மயில்சாமி கவுண்டர்,<br>'S. K. M. Poultry Service' ஈரோடு-2. | .... | 200 |
| 3. | திரு. M. தங்கமணி. M. Sc.<br>"போட்டோ சென்டர்" திண்டுக்கல். | .... | 100 |
| 4. | ஸ்ரீ சுவாமி சிவமயானந்தா,<br>சிவானந்தா ஆஸ்ரமம்,<br>ரிஷிகேஷ், இமயமலை (U. P.) | .... | 150 |
| 5. | அம்பத்தூர் பக்தர். | .... | 200 |
| 6. | ஸ்ரீ சுவாமி குருசமர்ப்பணனந்தா,<br>சிவானந்தா ஆஸ்ரமம்,<br>ரிஷிகேஷ், இமயமலை (U. P ) | .... | 250 |
| 7. | திருமதி வள்ளிராஜன்,<br>Buffla Road, சிங்கப்பூர்-8. | .... | 200 |
| 8. | Dr. R. VASUDEVAN,<br>P. I. S., M. B., B. S.<br>Kluang, (Johor) Malaysia. | .... | 250 |

9. திரு. K. S. மணியம்,
K. G. Victoria, Perai, மலேசியா. .... 500

10. திருமதி பார்வதி சுந்தரம்,
ஜாலன் மாமார், சிங்கப்பூர்–1232. .... 400

11. "குருபக்தி ரத்ன"
திரு. V. R. அண்ணாமலை, உபதலைவர்,
தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,
ஈப்போ கினி, மலேசியா. .... 250

12. திரு. R. கிருஷ்ணசாமி
ருக்மணி தம்பதிகள்,
ஸ்டார் பார்க், ஈப்போ, மலேசியா. .... 250

13. தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,
'தெய்வீக குடில்' ஈப்போ, மலேசியா. .... 250

14. திரு. V. சிங்காரவேல் & பிரதர்ஸ்,
வேல் குரூப்ஸ், சேலம்-1. .... 100

15. திரு. B. கபாலீஸ்வரன்,
ஸ்ரீ செல்வம் ஜுவல்லர்ஸ், சேலம்-1. .... 100

16. திரு. B. ஹிரியன்,
'சாந்தி நிவாஸ்' பாமுடி,
கோடநாடு, நீலகிரி Dt. .... 100

17. செல்வி P. T. தேவகி,
தலைமை ஆசிரியை,
T. V. S. நடுநிலைப்பள்ளி, இராசிபுரம். .... 100

18. செல்வி N. உமாசக்தி, B. A., கரூர்-2. .... 70

19. திருமதி பாவாயம்மாள்
பழனியப்ப செட்டியார்,
இராசிபுரம். .... 71

20. திரு. D. ஜெயராமுலு நாயுடு, B. A. B. L.
நாமக்கல். .... 70

21. திருமதி லக்ஷ்மி சின்னசாமி,
W/o. N. சின்னசாமி, M. A. B. T.
முத்துகாபட்டி. .... 70

22. திரு. M. G. ரங்கராஜு,
சவுண்ட் எஞ்சினியர், இராசிபுரம். .... 70

23. திரு R. சிவனேசன், மதுரை-2. .... 70

24. திரு. P. மனோகரன்,
206, தெப்பம் வடக்கு பஜார்,
விருதுநகர். .... 70

25. திரு. K. J. இராஜகோபால்,
73, கேஸ்வே ரோடு, சேலம்-6. .... 100

26. திரு. V. M. ராமையா தம்பதிகள்,
Kelang, Selangor, W. Malaysia. .... 200

27. ஸ்ரீமதி சௌந்திரவள்ளி சுந்தரராஜன்,
பெரை, மலேசியா. ... 200

28. திரு. M. S. சுந்தரம் பிள்ளை,
ஸ்ரீராம் பாப்புலர் சர்வீஸ்,
பாளையங்கோட்டை-2. .... 100

29. திருமதி பங்காரு சாம்பசிவம்,
35, காந்தி நகர், ஆத்தூர், சேலம் Dt. .... 100

30. திரு. R. சங்கர்லால்,
33, P. V. ஐயர் தெரு, சேலம். .... 101

31. திரு. M. R. கணபதி, ஆசிரியர்,
அரசினர் மேல்நிலைப் பள்ளி,
தொ. ஜேடர்பாளையம்,
சேலம் மாவட்டம். .... 100

32. திரு. S. K. சிரங்க செட்டியார் & சன்,
கைத்தறி ஜவுளி உற்பத்தியாளர்,
இளம்பிள்ளை (P. O.) .... 70

33. திரு. L. தர்மராஜன் &
திருமதி அம்சவேணி, ஆசிரியர்கள்,
அரசினர் உயர்நிலைப்பள்ளி,
சிராப்பள்ளி (P. O.) சேலம் Dt. .... 70

34. ஸ்ரீலஸ்ரீ மாதாஜி, தலைவி
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி மஹிலா சமாஜம்
சேலம்-14 .... 70

35. திரு. K. கிருஷ்ணன்,
வெள்ளிப்பட்டரை, சேலம்-5 .... 70

36. திரு. C. கந்தசாமி,
வெள்ளிப்பட்டரை, சேலம்-7. .... 70

37. திரு. A. C. K. இராமசாமி
செட்டியார் & சன்
Stainless Steel Emporium,
பெங்களூர்-53. .... 200

38. திரு. A. P. வெங்கடாஜலபதி, B. A.
நந்திதுர்க்கம், பெங்களூர்-46. .... 70

39. திரு. T. P. செல்லையா & சன்
சிவசண்முக விலாஸ், இராசிபுரம். .... 70

40. திரு. A. O. கெங்காதர செட்டியார் &
திருமதி சின்னம்மாள்,
குகை, சேலம்-6 .... 70

41. S. சிங்காரம், உதவித் தலைமை ஆசிரியர்
A.V.M. நடுநிலைப்பள்ளி, இராசிபுரம் .... 70

42. திருமதி A. சகுந்தலா, ஆசிரியை,
A.V.M. நடுநிலைப்பள்ளி, இராசிபுரம். .... 70

43. திரு. C. அன்புமலர், B. Com.,
S/o S. சின்னசாமி, ஈரோடு-1, .... 70

44. திரு. R. விஸ்வநாதன்,
சேலம் எலெக்டிரிகல் ஏஜன்சீஸ்,
சேலம்-1. .... 70

45. Sri A. Sundaram,
"American Express" New Delhi. .... 108

46. Smt. LAKSHMI NATARAJ MATHAJI,
New Delhi. ... 150

47. திரு. C. பரமசிவம்,
Prop: Senthil Trading Corporation,
சேலம்-1. .... 100

48. திரு. G. கோபாலகிருஷ்ணன்,
காரியதரிசி,
தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,
டாஸ்கர் டவுன், பெங்களூர். .... 70

# இனிமையின் இறைவன்

## (மதுராஷ்டகம்)

1. உதடுகள் இனியவை தோற்றமும் இனியது
கண்களும் இனியவை புன்முறுவலும் இனியது
உள்ளமும் இனியது உருவமும் இனியது
இனிமையின் இறைவன் முழுதும் இனியவன்
கண்ணபெருமானும் முழுதும் இனியவன்

2. சொல்லும் இனியது செயலும் இனியது
உடையும் இனியது உருவமும் இனியது
நடையும் இனியது சைகையும் இனியது
இனிமையின் இறைவன் முழுதும் இனியவன்
கண்ணபெருமானும் முழுதும் இனியவன்.

3. குழலும் இனியது அவனடிப் பொடியும் இனியது
கைகளும் இனியவை நீலக் கால்களும் இனியவை
நடனமும் இனியது அவன் நட்பும் இனியது
இனிமையின் இறைவன் முழுதும் இனியவன்
கண்ணபெருமானும் முழுதும் இனியவன்

4. பாட்டும் இனியது உண்ணும் பாலும் இனியது
உணவும் இனியது அவன் உறக்கமும் இனியது
அழகும் இனியது அவன் நெற்றியும் இனியது
இனிமையின் இறைவன் முழுதும் இனியவன்
கண்ணபெருமானும் முழுதும் இனியவன்

5. அங்கங்கள் இனியவை அவன் ஆட்டமும்
இனியது
மாயமும் இனியது அவன் கேலியும் இனியது
வாயும் இனியது அவன் ஓய்வும் இனியது
இனிமையின் இறைவன் முழுதும் இனியவன்
கண்ணபெருமானும் முழுதும் இனியவன்

6. முத்தும் இனியது அவன் மாலையும் இனியது
யமுனையும் இனியது அதன் நீரோட்டமும்
இனியது
நீரோடையும் இனியது தாமரை மலரும்
இனியது
இனிமையின் இறைவன் முழுதும் இனியவன்
கண்ணபெருமானும் முழுதும் இனியவன்

7. தோழிகள் இனியவர் அவன் விளையாட்டும்
இனியது
நேசமும் இனியது அவன் பிரிவும் இனியது
விலங்குகள் இனியவை அவன் வீசி எறிவதும்
இனியது
இனிமையின் இறைவன் முழுதும் இனியவன்
கண்ணபெருமானும் முழுதும் இனியவன்

8. தோழர்கள் இனியவர், அவன் பசுக்களும்
இனியவை
கோலும் இனியது அவன் படைப்பும் இனியது
கோபமும் இனியது, அவன் அருளும் இனியது
இனிமையின் இறைவன் முழுதும் இனியவன்
கண்ணபெருமானும் முழுதும் இனியவன்.

ஓம் நமோ பகவதே வாசுதேவாய।
ஓம் நமோ பகவதே வாசுதேவாய।

## பாகம்—1.

# லீலைகள்

## கிருஷ்ணபரமாத்மா

ஹரி ஓம் !

ஓம் நமோ பகவதே வாசுதேவாய !

கோபிகளின் தலைவனும், அர்ச்சுனனின் சாரதியும், பாவங்களை அழிப்பவனும், மனித குலத்தின் ஆசானும், இலட்சுமிதேவியின் கணவனும், ருக்மணி, ராதா, சத்யபாமா ஆகியவர்களுக்குப் பிரியமானவனும், பேரானந்தமே உருவானவனும், தானே பிரபஞ்சமாக இருப்பவனும், கோவர்த்தன கிரியைத் தன் சுண்டுவிரல் நுனியில் தாங்கியவனுமாகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவுக்கு வணக்கங்கள்.

ஆணவம் பிடித்த மன்னர்களின் உருவில் வாழ்ந்த பல அசுரர்களின் பாரத்தைப் பொறுக்க முடியாமல் பூமிதேவி மிகவும் துன்பப்பட்டுக்கொண்டிருந்தாள். எனவே அவள் பிரம்ம தேவனிடம் சரணடைந்தாள். ''பகவான் நாராயணன் வசுதேவருடைய மனையில் கிருஷ்ணனாக அவதரிக்கப் போகிறார். ஆதிசேஷன் அவருக்குத் தொண்டு செய்வதற்காக அவருடைய மூத்த சகோதரராக அவதரிக்கப் போகிறார். தேவ மாதர்களும் அவருக்குத் தொண்டு செய்வதற்காக பூமியில் பிறக்கப்போகிறார்கள். முனிவர்கள் பசுக்களாகப் பிறக்கப்போகிறார்கள். எனவே உனக்கு இனிமேல் துன்பம் இருக்காது. கிருஷ்ணபரமாத்மா கொடியவர்களைத் தண்டித்து, தர்மத்தை நிலை நாட்டுவார்,'' என்று பிரம்ம தேவன் சொன்னார்.

யதுக்கள், போஜர்கள், அந்தகர்கள் ஆகியவர்களின் மன்னனும் தன் தந்தையுமாகிய உக்ர சேனனைச் சிறையில் அடைத்துவிட்டு, கம்சன் தானே அரசாட்சி செய்யத் தொடங்கினான். மகத நாட்டின் மன்னனும், அவனுடைய மாமனருமாகிய ஜராசந்தனின் துணையுடன் யதுக்களைத் துன்புறுத்தினான். அசுரர்களின் தலைவர்களாகிய பகன், சாணூரன், தேனுகன், பூதனை, பாணன், பௌமன், பிரலாம்பரன், திரிணாவர்த்தன், மகாசேனன், முஷ்டிகன், அரிஷ்டன், திவிவிதன் ஆகியவர்களும் கம்சனுக்கு உதவி செய்தார்கள்.

மதுரா நகரத்தில் சூரசேனன் என்னும் மன்னன் ஆண்டு வந்தான். அவன் யதுக்களின் தலைவன். ஒரு சமயம் சூரசேனனின் மகன் வசுதேவர் தன் மனைவியாகிய தேவகியுடன் திருமண ஊர்வலமாக வருவதற்காக இரதத்தில் ஏறினார். உக்ரசேனனின் மகனும் தேவகியின் தமயனுமாகிய கம்சன் மகிழ்ச்சியுடன் அந்தத் தேரை ஓட்டினான்.

வழியில் வானத்திலிருந்து, ''ஏ மூடனே! உன் தங்கை தேவகியின் வயிற்றில் பிறக்கும் எட்டாவது குழந்தை உன்னைக் கொல்லப்போகிறது,'' என்ற குரல் அசரீரியாகக் கேட்டது. உடனே கம்சன் மிகுந்த சினத்துடன் தேவகியின் கூந்தலைப் பிடித்திழுத்துக் கீழே தள்ளித் தன் உடைவாளால் அவளை வெட்டப்போனான். வசுதேவர் கம்சனைச் சமாதானப் படுத்திப் பேசத் தொடங்கினார். ''கம்சா! வீரர்கள் உன்னைப் புகழ்ந்து பேசுகிறார்கள். உன்னால் போஜர்கள் பெருமை பெற வேண்டும். நீ ஒரு பெரிய வீரன். திருமண சமயத்தில் ஒரு பெண்ணை அதுவும் உன் சகோதரியைக் கொல்லலாமா? அது உனக்கேற்ற செயலாகுமா? அது உனக்கு இழிவையும் பாவத்தையும் தேடித்தரும். அசரீரி சொன்னதைப்

பொருட்படுத்த வேண்டாம். நீ பயப்படுவதற்குக் காரணமான என் குழந்தைகள் எல்லோரையும் பிறந்தவுடன் உன்னிடம் ஒப்புவித்துவிடுகிறேன்''

அவர் சொல்லைக் கேட்ட கம்சனும் தன் கொடிய செயலைத் தவிர்த்தான். வசுதேவரும் அவனைப் புகழ்ந்து பாராட்டிவிட்டுத் தம் அரண்மனைக்குச் சென்றார்.

தேவகிக்குப் பிறந்த ஆறு குழந்தைகளையும் கம்சன் கொன்றான். தேவகிக்கும் வசுதேவருக்கும் விலங்கிட்டுச் சிறையிலடைத்துவிட்டான். ஏழாவது குழந்தை அனந்தனாகிய ஆதிசேஷனின் அம்சத்தைக் கொண்டிருந்தது. தேவகியின் கருப் பையிலிருந்து எடுத்துச் செல்லப்பட்டதால் அந்த ஆண் குழந்தை ''சங்கர்ஷணன்'' எனப் பெயர் பெற்றது.

இறைவன் யோக மாயையை அழைத்து, ''நந்த கோகுலத்திலுள்ள விரஜா எனப்படும் பகுதிக்குச் செல். அங்கே வசுதேவரின் மனைவியாகிய ரோகிணி இருக்கின்றாள். தேவகியின் கருப்பையிலிருக்கும் என் அம்சமாகிய ஆதிசேஷனை ரோகிணியின் கருப் பையில் சேர்த்துவிடு. நான் தேவகியின் குழந்தை யாகப் பிறக்கிறேன். நீ நந்தனின் மனைவியாகிய யசோதையின் குழந்தையாகப் பிறக்கவேண்டும்,'' என்று சொன்னார். யோக மாயையும் பூமிக்குச் சென்று பகவான் சொல்லிய வண்ணமே செய்தாள். எங்கும் நிறைந்துள்ள இறைவன் வசுதேவரின் மனதில் பூரண அம்சங்களோடு நுழைந்தார். தேவகி வசுதேவரின் மனத்தின் வாயிலாகப் பெற்ற பகவானின் புனித ஆவியைச் சுமந்திருந்தாள். அதன் காரணமாக மிகுந்த அழகுடன் பிரகாசித்தாள்.

கிருஷ்ணனைக் குழந்தையாகப் பெறுவதற்கு வசுதேவரும் தேவகியும் அரிய தவம் செய்திருக்க வேண்டும்.

கம்சன் எட்டாவது முறை மிகவும் கவனமாக இருந்தான். வசுதேவரையும், தேவகியையும் கடுங்காவலில் வைத்தான். கிருஷ்ணன் சிறைக் கூடத்தில் பிறந்தான்.

இறைவனையே வயிற்றில் சுமந்து கொண்டிருந்ததால், தன் சகோதரியின் முகத்தில் தெய்வீகப் பொலிவு நிறைந்து விளங்குவதைக் கம்சன் கண்டான். ''என் எதிரியாகிய ஹரி ஏற்கனவே அவள் கருவினுள் நுழைந்துவிட்டான். இந்த நெருக்கடியில் நான் என்ன செய்ய வேண்டும்! இறைவன் தன் நோக்கத்தை நிறைவேற்றுவது உறுதி. ஒரு பெண்ணைக் கொல்வது, அதுவும் அவள் கருவுற்றிருக்கும்போது கொல்வது என் புகழ், செல்வம், உயிர் ஆகியவற்றை அழித்துவிடும்,'' என்று கம்சன் எண்ணினான். எனவே தன் தங்கையைக் கொல்ல வேண்டுமென்ற கொடிய தீர்மானத்தைக் கைவிட்டான். இறைவனிடம் தீராத வெறுப்பைக் கொண்டான். உட்காரும்போதும், நிற்கும்போதும், நடக்கும்போதும், உண்ணும்போதும், உறங்கும்போதும், குடிக்கும்போதும் இறைவனைப் பற்றியே அவன் மனம் எண்ணிக்கொண்டிருந்தது. இறைவன் இந்த உலகம் முழுவதிலும் நிறைந்திருப்பதைக் கண்டான். அவன் பக்தி வெறுப்பின் காரணமாக வளர்ந்தது.

பிரம்மனும், ருத்ரனும், நாரதரும், தேவர்களும் அங்கு வந்து தேவகியின் கருவிலிருந்த இறைவனைப் புகழ்ந்து போற்றத் தொடங்கினார்கள். ''ஹரி! உன் அவதாரத்தினால் பூமிதேவியின் பாரம்

குறைந்தது. புனித தேவகி அன்னையே! எங்கள் பெருமைக்காகவும், நலத்துக்காகவும், பரந்த உலகத்தின் நல்வாழ்வுக்காகவும் மேலான இறைவன் உன் வயிற்றில் அவதாரம் செய்திருக்கிறார். உன் மகன் எல்லாருக்கும் பாதுகாவலர் ஆவார். கம்சன் விரைவில் அழிந்து போவான். பயப்பட வேண்டாம்.

## கண்ணன் பிறப்பு

நல்ல வேளை நெருங்கிற்று. ரோகிணி நட்சத்திரம் உச்சத்தில் இருந்தது. அது விஜய முகூர்த்தம். கண்ணன் பிறக்கப்போவதனால் இயற்கையிலுள்ள பொருள்கள் யாவும் மிகவும் மகிழ்ச்சியுடனிருந்தன. குளங்களில் தாமரைகள் மலர்ந்திருந்தன. நல்ல காற்று வீசிக்கொண்டிருந்தது. விண்மீன்கள் சுடரொளி வீசிக்கொண்டிருந்தன. நள்ளிரவில் கண்ணன் பூமியில் அவதரித்தான். தேவர்கள் தெய்வீக இசை பொழிந்தார்கள். கின்னரர்களும், கந்தர்வர்களும் பாடினார்கள். சித்தர்களும், சாரணர்களும் புகழ்ந்தார்கள். வித்தியாதரர்கள், அப்சரசுகள், முனிவர்கள், தேவர்கள் ஆகியவர்கள் மகிழ்ச்சியால் கூத்தாடினார்கள். மகிழ்ச்சியினால் வானத்திலிருந்து மலர் மாரி பொழிந்தது.

தாமரை மலர்போன்ற கண்களுடனும், சங்கு, சக்கரம், கதை, தாமரை மலர் ஆகியவை தாங்கிய நான்கு கரங்களுடனும், கௌஸ்துப மணியுடனும், மார்பில் ஸ்ரீவத்ஸ முத்திரையுடனும், பீதாம்பரமும், நவரத்தின மணிமகுடமும், காதுகளில் வைரங்களாலான காதணிகளுடனும், கைகளிலும், தோள்களிலும், வளையல்களுடனும், இடுப்பில்

விலைமதிப்பற்ற மேகலையுடனும் மகாவிஷ்ணு அவ தாரம் செய்தார். வசுதேவர் இந்த தெய்வீகக் குழந்தையைக் கண்டு வியப்பும் பெருமகிழ்ச்சியும் கொண்டார்.

''முன்னரே தங்களைப் பரப்பிரம்மம் என்று அறிவேன். தாங்கள் ஞானமும் பேரின்பமும் உருவமானவர். எல்லாருடைய இதயங்களிலும் தாங்கள் வீற்றிருக்கின்றீர்கள். தாங்களே அனைவர் மனத்திலுமுள்ள சாட்சியாவீர்கள். தாங்கள் மாயைக்கும் அவித்தைக்கும் அப்பாற்பட்ட வர்கள்'', என்று வசுதேவர் இறைவனைப் போற்றிப் புகழ்ந்தார்.

தேவகி தன் குழந்தையிடம் மகாவிஷ்ணுவின் அடையாளங்களைக் கண்டு, அவரைப் போற்றத் தொடங்கினாள். ''தாங்கள் ஆரம்ப மற்றவர், எங்கும் நிறைந்தவர், சுயம்பிரகாசமுள்ளவர், குணங்களைக் கடந்தவர், மாறுதலற்றவர், செய லற்றவர், எல்லா உயிர்களுக்கும் தோற்றமும் முடிவும் தாங்கள்தான். நான்கு கரங்களுடன் கூடிய இந்த உருவத்துடன் இருக்க வேண்டாம். சாதாரணக் குழந்தையின் உருவத்துடன் இருங்கள். இந்த தெய்வீக உருவத்தை மறைத்துக்கொள்ளுங் கள். நாங்கள் கம்சனை எண்ணி பயப்படுகிறோம்'', என்று தேவகி கூறினாள்.

''என்னைப் பரம் பொருளாகவும் உங்கள் மகனாகவும் எண்ணிப் பலமுறை அன்புடன் தியானம் செய்யுங்கள். முடிவில்லாத பேரின்பமும் அமர வாழ்வும் அடைவீர்கள்'' என்று இறைவன் சொன்னான்.

இறைவன் தன்னுடைய மாயையின் உதவியால் ஓர் அழகிய குழந்தையாக மாறினூர். என்னை கோகுலத்திற்கு எடுத்துச் சென்று விட்டுவிட்டு, அங்கு யசோதைக்குப் பிறந்துள்ள என் மாயையின் அம்சமாகிய குழந்தையை விரைவில் இங்கு எடுத்து வந்துவிடு,'' என்று வசுதேவரிடம் பகவான் சொன்ஞர். வசுதேவர் அவ்வண்ணமே குழந்தையை எடுத்துக்கொண்டு வெளியே வந்தார். சிறைக் காவலாளிகள் மாயையின் காரணமாக மயக்கத்தில் ஆழ்ந்து இருந்தார்கள். அங்கிருந்த மற்றவர்கள் எல்லோரும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார்கள். பூட்டியிருந்த சிறைக் கதவுகள் தாமாகவே திறந்து கொண்டன. இலேசாக மழை பெய்துகொண்டிருந்தது. ஆதிசேஷன் தன் படங்களை விரித்துக்கொண்டு, குடைபோல இறைவனை மழையினின்றும் காத்தான். வெள்ளப் பெருக்குடன் வேகமாக ஓடிக்கொண்டிருந்த யமுனை நதி, இரண்டாகப் பிரிந்து வசுதேவருக்கு வழிவிட்டது.

வசுதேவர் யசோதையின் படுக்கையில் தான் எடுத்துவந்த குழந்தையை விட்டுவிட்டு, அவளருகே இருந்த பெண் குழந்தையை எடுத்துக்கொண்டு சிறைச்சாலைக்குத் திரும்பிவந்து தேவகியின் அருகில் விட்டார். மீண்டும் பழையபடியே தம் கால்களில் விலங்குகளை மாட்டிக்கொண்டார்.

சிறைக் காவலர்கள் ஓடிச்சென்று தேவகிக்குக் குழந்தை பிறந்திருப்பதைக் கம்சனிடம் தெரிவித்தார்கள். கம்சன் சிறைச்சாலையில் தேவகியிருந்த இடத்துக்கு வந்தான். ''கம்சனே! இது உன் தங்கையின் குழந்தை. ஒரு பெண் குழந்தையைக் கொல்வது உனக்கு அடுக்காது, என்று தேவகி கம்சனிடம் கூறினுள். கம்சன் அதைப் பொருட்படுத்தாமல், அவளிடமிருந்த குழந்தையைப்

பறித்து, ஒரு கல்லின்மீது மோதினன். அக்குழந்தை அவன் கையிலிருந்து நழுவி, மேலே சென்று திருமாலின் சகோதரியின் உருவத்தில் தோன்றியது. தெய்வீக மாலையும், ஆடைகளும், அணிகலன்களும் அணிந்து, தன் எட்டு கைகளில் சூலம், வில், வாள், சங்கு, சக்கரம், கதை முதலான ஆயுதங்களைத் தரித்திருந்தாள். சித்தர், கந்தருவர், கின்னரர் ஆகியோர் அவள் புகழைப் பாடினர்.

''முட்டாளே! என்னைக் கொல்வதால் என்ன பயனைப் பெறப்போகின்றாய்! உன்னைக் கொல்பவன் வேறோரிடத்தில் பிறந்திருக்கிறான். அவன்தான் உன் பழைய பகைவன். தேவகி, வசுதேவர் அவர்களுடைய மற்ற குழந்தைகள் முதலிய ஆதரவற்றவர்களை வீணாகத் துன்புறுத்தாதே,'' என்று கூறினாள்.

அக்குழந்தையின் வார்த்தைகளைக் கேட்ட கம்சன் திடுக்கிட்டான். தேவகியையும் வசுதேவரையும் விடுவித்தான். ''புனித ஆத்மாக்களே! உங்கள் குழந்தைகளைக் கொன்றுவிட்டேன் என்று மனம் வருந்த வேண்டாம். மக்கள் தங்களையறியாமலே தாங்கள் செய்த கர்மத்தின் பலன்களை அனுபவிக்கின்றார்கள். மரணத்துக்குப் பிறகு எனக்கு என்ன நேரப்போகின்றதென்பது எனக்குத் தெரியவில்லை,'' என்று அவர்களிடம் அடக்கத்துடன் கூறி அவர்களுடைய விலங்குகளை நீக்கினான்.

கம்சன் தன் அமைச்சர்களை அழைத்து, மாயா தேவி கூறிய அனைத்தையும் அவர்களிடம் தெரிவித்தான். ''அரசே! அது உண்மையானல், நகரங்களிலும், கிராமங்களிலும், வயல் வெளிகளிலும், பத்து நாட்களுக்குள் பிறந்த குழந்தைகள் எல்லாவற்றையும் கொன்றுவிடுகிறோம். விஷ்ணுதான் தேவர்களுக்குத் துணைவர். வேதங்கள், பசுக்கள்,

பிராமணர்கள், தவம், யாகங்கள் ஆகியவை தர்மத்துக்குத் துணையாக இருக்கின்றனர். வேதங்களைக் கற்று, வேள்விகளைச் செய்யும் தவசீலர்களாகிய பிராம்மணர்களையும், வேள்விக்கு நெய் கொடுத்துதவும் பசுக்களையும் கொன்றுவிடுகிறோம். பிராம்மணர்கள், வேதங்கள், துறவு, உண்மை, புலனடக்கம், மன அடக்கம், நம்பிக்கை, கருணை, பொறுக்கும்தன்மை, வேள்விகள் ஆகியவைதான் விஷ்ணுவின் அங்கங்கள். ஆகவே விஷ்ணுவைக் கொல்வதற்குரிய மிகச் சிறந்த வழி இவைகளை அழித்துவிடுவதுதான்,'' என்று அமைச்சர்கள் கம்சனிடம் கூறினார்கள். எனவே அவைகளை நாசம் செய்யுமாறு தன் அமைச்சர்களுக்குக் கட்டளையிட்டு விட்டு, கம்சன் தன் அரண்மனைக்குச் சென்றார்.

## பிறந்த நாள் கொண்டாட்டம்

குழந்தை பிறந்ததால், நந்தனுக்குப் பெரு மகிழ்ச்சி ஏற்பட்டது. கோகுலத்தில் நந்தன் குழந்தையின் பிறந்த நாளை வெகு ஆடம்பரத்துடன் கொண்டாடினான். வேதமோதிய அந்தணர்களை அழைத்து, பிறந்த நாள் சடங்கையும், முன்னோர் வழிபாட்டையும், தேவர்களின் வழிபாட்டையும் முறையாக நடத்தினான். நிறைய பரிசுகளை வழங்கினான். அந்தணர்கள் குழந்தையை வாழ்த்தினர். பாடகர்கள் பாடல்களை இசைத்தனர். கோகுலத்திலுள்ள வீடுகள் கொடிகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டன. வீடுகள் நன்கு சுத்தம் செய்யப்பட்டு, நறுமணமுள்ள நீர் தெளிக்கப்பட்டது. கோபர்கள் விலையுயர்ந்த ஆடைகளையும், மேலங்கிகளையும், தலைப்பாகைகளையும் அணிந்துகொண்டு கைகளில் விலையுயர்ந்த பரிசுப் பொருள்களை ஏந்திக்கொண்டு நந்தகோபனுடைய மனைக்கு வந்து சேர்ந்தார்கள்.

மஞ்சள் பொடியை எண்ணெயில் கலந்து குழந்தையின் தலையிலிட்டு, குழந்தைக்கு நீண்ட ஆயுளை வேண்டி பாடல்களைப் பாடி வாழ்த்தினார்கள். அழகிய ஆடை, அணிகலன்களால் தங்களை அலங்கரித்துக்கொண்டு, ஒருவர்மீதொருவர் மஞ்சள் நீரைத் தெளித்துக்கொண்டார்கள். அன்று முதல் நந்தகோபனுடைய மக்கள் எல்லா வகைகளிலும் முன்னேற்றத்தின் சிகரத்தை அடைந்தார்கள்.

## பூதனையின் மோட்சம்

கம்சனின் கட்டளைக்கிணங்க பூதனை என்னும் அரக்கி நகரங்களிலும், கிராமங்களிலும், வயல் வெளிகளிலும் மிகுந்த குழந்தைகளைக் கொன்று கொண்டு திரிந்தாள். குழந்தைகளைக் கொல்வதே வேலையாக இருந்தாள். வானத்தில் பறந்து செல்லவும், அவள் விரும்பிய உருவத்தை எடுத்துக் கொள்ளவும் அவளுக்கு ஆற்றல் இருந்தது. அவள் அழகான பெண்ணின் வடிவத்தோடு கோகுலத்தில் நுழைந்தாள். நந்தகோபனுடைய வீட்டிற்குள் சென்றபோது தெய்வீகக் குழந்தையாகிய கண்ணன் தொட்டிலில் படுத்திருப்பதைக் கண்டாள். கொடியவர்களுக்கு எமனைப்போன்ற கண்ணன், தன் அளவு கடந்த ஆற்றலையும், பெருமையையும் அடக்கிக்கொண்டு நீறுபூத்த நெருப்பைப்போல் இருந்தான். கொடியவளான பூதனை குழந்தையை எடுத்து மடியில் வைத்துக்கொண்டு தன் மார்பகத்திலிருந்த நஞ்சு கலந்த பாலை ஊட்டத் தொடங்கினாள். கண்ணன் அவளுடைய மார்பகங்களை அழுத்தி கசக்கி, அவளுடைய உயிரையே குடிக்கத் தொடங்கினான். ''போதும்! போதும்! என்னை விட்டுவிடு'', என்று பூதனை கூக்குரலிட்டு அலறினாள். இறுதியில் கண்கள் பிதுங்கி வெளியே வர, பூதனையின் உயிரற்ற உடல் பெரிய மலையைப் போலத் தரையில் சாய்ந்தது.

யசோதையும், மோகினியும் கோபிகைகளுடன் ஓடி வந்தார்கள். இறைவனுக்கே பாலூட்டிய தால் தன் பாவங்களிலிருந்து விடுதலை பெற்ற பூதனையின் பருத்த உடலின்மீது, எவ்வித பயமு மின்றி விளையாடிக் கொண்டிருந்த குழந்தையைத் தாவி எடுத்துக் கொண்டார்கள். கண்ணனுடைய உடலால் தீண்டப்பட்டு தூய்மை பெற்றதால், பூதனையின் உடல் எரிந்தபோது அதிலிருந்து கிளம்பிய புகை சந்தன மரத்திலிருந்து வருவதைப் போன்று நறுமணமுடன் இருந்தது. கண்ணனைக் கொல்ல வேண்டுமென்ற கொடிய எண்ணத்துடன் வந்தபோதிலும், இறைவனுக்குப் பாலூட்டிய செவிலித் தாயானாள்.

## வண்டியைக் கவிழ்த்தல்

குழந்தை நடை பயிலத் தொடங்கிய நாளும் பிறந்த நாளும் ஒன்றாகக் கொண்டாடப்பட்டன. நந்தகோபனுடைய வீட்டில் ஒரு பெரிய விருந்து நடந்தது. மங்கல நீராட்டப்பட்டதும் குழந்தை கண்ணன் கண்களை மூடிக்கொண்டு சோர்வுடன் காணப்பட்டான். யசோதை பால் பாத்திரங் களுடனும், தயிர் பாத்திரங்களுடனும் அங்கிருந்த ஒரு வண்டியின் அடியில் குழந்தையைப் படுக்க வைத்தாள். சிறிது நேரம் கழித்து, கண்ணன் விழித்துக்கொண்டு, பாலுக்காக அழுதான். விருந்தாளிகளை வரவேற்பதில் ஈடுபட்டிருந்த யசோதையின் காதுகளில் குழந்தையின் அழுகுரல் கேட்கவில்லை. கண்ணன் வண்டியைத் தன் கால் களால் எட்டி உதைத்தான். வண்டி கவிழ்ந்தது; பாத்திரங்கள் உடைந்தன; வண்டியின் அச்சும், சக்கரமும் தலைகீழாகக் கவிழ்ந்து, நுகத்தடி தூளா யிற்று. கோபியரும், கோபாலர்களும் திகைப் புற்றார்கள். இந்த விந்தையான நிகழ்ச்சியை

அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. அங்கே விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்கள் குழந்தையாகிய கண்ணன் கால்களை உதறிக்கொண்டு அழுத பொழுது அந்த வண்டியை உதைத்துக் கவிழ்த்து விட்டான் என்று கோபாலர்களிடமும், கோபியர்களிடமும் தெரிவித்தார்கள். ஆனால் சிறுவர்கள் சொன்னதை அவர்களால் எளிதில் நம்ப முடியவில்லை. அந்தக் குழந்தையின் அளவு கடந்த வலிமையை அவர்கள் உணரவில்லை.

## திரிணாவர்த்தன் அழிவு

ஒரு நாள் யசோதை குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு கொஞ்சி விளையாடிக்கொண்டிருந்தாள். திடீரென்று கண்ணனின் பளு பெரிய பாறாங்கல்லைப்போன்று மிகவும் அதிகமாயிற்று. அந்தப் பளுவைத் தாங்க முடியாமல் குழந்தையைத் தரையில் வைத்துவிட்டு வேறு வேலையைக் கவனிக்கச் சென்றாள். அப்போது கம்சனுடைய வேலைக்காரனான திரிணாவர்த்தன் என்னும் அரக்கன் கம்சனுடைய ஆணையின்படி பெருங்காற்றின் உருவத்தில் வந்து கண்ணனைத் தூக்கிக்கொண்டு போனான்.

சிறிது நேரம் கோகுலம் முழுவதும் புழுதியும், இருளும் சூழ்ந்திருந்தது. அந்த அரக்கன் வானத்தில் உயரே சென்றாலும், கண்ணனின் பளுவின் காரணமாக அதற்கு மேலே நகர முடியவில்லை. அந்தக் குழந்தை அரக்கனின் கழுத்தை இறுக்கமாகப் பிடித்து நெருக்கினான். அரக்கன் தன் ஆற்றலை இழந்துவிட்டதால், குழந்தையைக் கீழே தள்ள முடியவில்லை. அவனுடைய உயிரற்ற உடல் கீழே இருந்த ஒரு பாறையின்மீது விழுந்து சின்னாபின்னமாக நொறுங்கிப்போயிற்று. கோபியர்

களும், கோபாலர்களும் எவ்வித ஆபத்துமின்றி அரக்கனின் உடலின்மீது விளையாடிக்கொண்டிருந்த கண்ணனைக் கண்டு பெரு மகிழ்ச்சி அடைந்து, குழந்தையை யசோதையிடம் கொண்டு வந்தார்கள்.

## யசோதைக்கு விசுவரூப தரிசனம் காட்டுதல்

ஒரு நாள் யசோதை குழந்தை கண்ணனைத் தன் மடியில் வைத்துக்கொண்டு பாலூட்டிக் கொண்டிருந்தாள். குழந்தையை மீண்டும் மீண்டும் முத்தமிட்டாள். அப்பொழுது கண்ணன் வாயைத் திறந்து கொட்டாவி விட்டான். யசோதை குழந்தையின் வாய்க்குள் பிரபஞ்சம் முழுவதையும் கண்டாள். ஆகாயம், அண்டவெளி, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், நான்கு பருவங்கள், நெருப்பு, காற்று, சமுத்திரங்கள், கண்டங்கள், மலைகள், ஆறுகள், காடுகள். தீவுகள் மற்றும் பிரபஞ்சத்திலுள்ள உயிருள்ள உயிரற்ற பொருள்கள் அனைத்தும் அங்கிருப்பதைப் பார்த்தாள்.

தன் மகனுடைய வாய்க்குள் பிரபஞ்சம் முழுவதும் இருப்பதைக் கண்ட யசோதை நடுங்கி, பயத்தினால் கண்களை மூடிக்கொண்டாள். வியப்பினால் திகைத்துப்போனாள்.

## பெயரிடும் சடங்கு

யதுக்களின் குருவாகிய தர்க்காச்சாரியார், ஒரு நாள் வசுதேவரின் வேண்டுகோளுக்கிணங்கி நந்த கோகுலத்துக்கு வந்தார். நந்தகோபன் அவரை முறைப்படி வரவேற்று, ''தாங்கள் வேதங்களை நன்றாகக் கற்றறிந்தவர். சோதிட சாஸ்திரம்

தங்களால் வரையறுக்கப்பட்டுள்ளது. இந்த இரண்டு சிறுவர்களுக்கும் பெயர் சூட்டவேண்டும்,'' என்று அவரிடம் பணிவுடன் வேண்டிக்கொண்டான். ''நான் யதுக்களின் குரு என்று எல்லோருக்கும் தெரியும். உன் மகனுடைய பெயர் சூட்டும் விழாவை நான் நடத்தி வைத்தால், உன் மகன் தான் தேவகியின் எட்டாவது குழந்தை என்று கம்சன் சந்தேகப்படுவான்,'' என்று தர்க்காச்சாரியார் தெரிவித்தார். எனவே எவரும் வராத இடத்தில் மிகவும் இரகசியமாக தர்க்காச்சாரியார் பெயர் சூட்டு விழாவை நடத்திவைத்தார்.

''ரோகிணியின் மகன் அழகு நிறைந்தவன் என்னும் பொருள்பட ''இராமன்'' என்று அழைக்கப்படுவான். அவன் தன் நண்பர்களையும், உறவினர்களையும் தன் நற்பண்புகளால் கவரும் தன்மை உடையவன். தன்னுடைய அளவற்ற உடல் வலிமையின் காரணமாக ''பலன்'' என்றும் அழைக்கப்படுவான். யதுக்களுக்கிடையேயுள்ள வேற்றுமைகளைப் போக்கி, அவர்களை ஒன்றுபடுத்தும் சிறப்பால் ''சங்கர்ஷணன்'' என்றும் பெயர் பெறுவான். இந்தக் கருநிறமுள்ள இரண்டாவது குழந்தை யுகங்கள்தோறும் மனித உருவில் அவதாரம் செய்கிறுன். ஏற்கனவே, வெண்மை, சிவப்பு, மஞ்சள் ஆகிய நிறங்களுடன் தோன்றி இருக்கிறுன். இப்பொழுது கறுப்பு நிறத்தில் தோன்றியுள்ளான். எனவே அவன் ''கிருஷ்ணன்'' என்று பெயர் பெறுகிறுன். உன் மகனுக்கு அநேக உருவங்களும், பெயர்களும் உண்டு. அவனுல் உங்கள் வாழ்வில் செழிப்பும், மகிழ்ச்சியும் உண்டாகும். அவன் உங்களை எல்லாவிதமான அபாயங்களினின்றும் பாதுகாப்பான். எல்லாவிதமான இடையூறுகளையும் முற்றிலும் வெல்வீர்கள். கோபாலர்களுக்கும், பசுக்களுக்கும், கோகுலம் முழுவதற்குமே அளவு

கடந்த இன்பத்தை வழங்குவான். நந்தகோபா! குணத்திலும், உருவத்திலும், புகழிலும், சிறப்பிலும், ஆற்றலிலும் உன் மகன் நாராயணனாகிய இறைவனுக்கே சமமாவான்,'' என்று கர்க்காச்சாரியார் நந்தகோபனிடம் கூறினர்.

## கண்ணனின்
## பிள்ளைப் பருவ விளையாட்டுகள்

கண்ணனின் குறும்புத்தனம் அதிகரித்துக் கொண்டே வந்தது. கோபியர் வீட்டிலிருக்கும் கன்றுக் குட்டிகளைப் பால் கறக்கும் நேரத்திற்கு முன்னரே அவிழ்த்து விட்டுவிடுவான். அவர்கள் வீட்டிலுள்ள பால், தயிர், வெண்ணெய் ஆகியவற்றைத் திருடித் தின்ற பிறகு மீதியுள்ளதைக் குரங்குகளுக்குக் கொடுத்து விடுவான். அவைகள் தின்னவிட்டால் பானைகளைப் போட்டு உடைத்து விடுவான். உறிகளில் உள்ள பானைகளின் அடியில் ஓட்டை செய்து அவைகளில் என்ன இருக்கின்றது என்று பார்ப்பான். அவைகள் கைக்கெட்டா விட்டால் உரல்களை உருட்டிச்சென்று அவற்றின் மீது ஏறி நிற்பான். வீடுகளுக்குள்ளே இருட்டாக இருந்தால் தன் உடல், அணிகலன்கள் ஆகியவற்றின் துணையால் அறையில் ஒளியைப்பரப்புவான்.

ஒருநாள் ஒரு கோபிகை யசோதையிடம் கண்ணனுடைய குறும்புத்தனத்தைச் சொல்வதற்காக அவன் கையைப் பிடித்து இழுத்துச் சென்றாள். கண்ணன் எப்படியோ அவள் கையிலிருந்து விடுபட்டு மறைந்து விட்டான். காணமற்போன கண்ணன் அவன் தாயின் அருகில் நிற்பதைக் கண்ட கோபி வெட்கத்துடன் ஒன்றும் பேசாமல் தன் வீட்டுக்குத் திரும்பினாள்.

ஒருநாள் பலராமனும் மற்ற சிறுவர்களும், ''கண்ணன் மண்ணைத் தின்றுவிட்டான்'' என்று

யசோதையிடம் சொன்னார்கள். அதனால் கண்ணன் உடலுக்கு ஏதாவது துன்பம் ஏற்படும் என்று பயந்து யசோதை கண்ணனைக் கண்டித்தாள். '' குறும்புக்காரனே! இரகசியமாக ஏன் மண்ணைத் தின்றாய்?'' என்று யசோதை மிரட்டிக் கேட்டாள். '' தாயே ! நான் மண் தின்னவில்லை. இவர்கள் பொய் சொல்லுகிறார்கள். என் வாயைப் பாருங்கள், '' என்று கண்ணன் சொன்னவுடன், யசோதை வாயை திறக்கச் சொன்னாள். கண்ணன் வாயைத் திறந்தவுடன் அதற்குள்ளே பிரபஞ்சம் முழுவதும் அதிலுள்ள உயிருள்ள பொருள்களையும், உயிரற்ற பொருள்களையும், ஆகாயம், துருவங்களை யும், மலைகளையும், கண்டங்களையும், கடல்களையும், உலக முழுவதையும், காற்று, நெருப்பு, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், சப்தத்வீபங்கள், கிரகங் கள், தேவர்கள், மனம், புலன்கள், மூவகைக் குணங்கள், அவற்றின் மாறுபாடுகள், ஜீவன், காலம், கர்மம், அதன் வித்துக்கள், பிருந்தாவனம் ஆகியவற்றையும் (யசோதையாகிய தன்னையும்) கண்டு பெரும் வியப்படைந்தாள். இது என்ன ! கனவா ? அல்லது இறைவனின் மாயையா ? அல்லது என் குழந்தைக்குப் பிறவியிலேயே உள்ள யோக சக்தியா ?'' என்று சந்தேகப்பட்டாள். பின்னர் ''தவறான கருத்துக்களை உண்டாக்கும் மாயைக்குத் தலைவனாகிய இறைவனுக்கு வணக்கங்கள். இதுதான் என் கணவரான நந்தகோபர். இது என் மகன். இது யசோதை யாகிய நான். இது என்னுடையது '' என்று கூறிக் கொண்டே இறைவனின் யோகமாயையால் ஏற்பட்ட அந்த விந்தையான காட்சியை மறந்து தன்னிலைக்கு வந்தாள். கண்ணன் தன் குழந்தையே என்ற நிலையை எண்ணி, அவனைத் தன் மடி மீது அமர்த்திக் கொண்டாள்.

## கண்ணனைக் கட்டிப் போடுதல்.

ஒரு நாள் யசோதை தன் மகனுடைய விளையாட்டுகளைப் பற்றிப் பாடிக் கொண்டே தயிரைக் கடைந்து கொண்டிருந்தாள். கண்ணன் பால் குடிக்க விரும்பித் தாயிடம் ஓடி வந்தான். தயிர் கடையும் மத்தை பிடுங்கிக் கொண்டு தயிர் கடையாமல் தடுத்தான்.

யசோதை அவனை மடிமேலிருத்திக் கொண்டு பாலூட்டினாள். அதே சமயம் அடுப்பின் மேலிருந்த பால் பொங்கி வழிந்தது. கண்ணனைக் கீழே இறக்கி விட்டு அடுப்பிலிருந்து பாலை இறக்கி வைக்க ஓடினாள். கண்ணனுக்கு வயிறு நிரம்பவில்லை. எனவே கோபத்துடன் தயிர்க்குடத்தின் மீது ஒரு கல்லை எறிந்து உடைத்துவிட்டு, அடுத்த அறைக்குச் சென்று வெண்ணெய் திருடித் தின்னத் தொடங்கினான்.

சிறிது நேரம் கழித்துத் திரும்பி வந்த யசோதை, தயிர்க்குடம் உடைந்து கிடப்பதைக் கண்டாள். அங்கு கண்ணன் இல்லாததைப் பார்த்து, அவன் வேலைத்தனம் இது என்று எண்ணினாள். அவனைத் தேடிச் சென்றபோது, கண்ணன் ஒரு உரலின்மேல் நின்றுகொண்டு உறியிலிருந்த பால், வெண்ணெய் ஆகியவற்றைக் குரங்குகளுக்குக் கொடுத்துத் தானும் உண்பதைக் கண்டாள். ஒரு கோலை எடுத்துக்கொண்டு மெதுவாக அவனருகில் சென்றாள். கண்ணன் அவளைக் கண்டு பயந்தவனைப் போல உரலினின்றும் கீழே குதித்து ஓடினான். யசோதை நீண்டநேரம் துரத்திக்கொண்டு ஓடிய பின் இறுதியில் அவனைப் பிடித்தாள். கோலை எறிந்துவிட்டு அவனை ஓர் உரலுடன் கயிற்றால்கட்ட முயன்றாள். ஆனால் கயிறு சற்று நீளம் குறைவாக

இருந்தது. வேறொரு கயிற்றை அதனோடு இணைத்தாள். அப்பொழுதும் நீளம் குறைவாக இருந்ததால், மீண்டும் வேறொரு துண்டுக் கயிற்றைச் சேர்த்தாள் இவ்வாறே பலமுறை கயிறுகளைச் சேர்த்தும் கயிற்றின் நீளம் குறைவதைக் கண்டு வியப்படைந்தாள். யசோதை தளர்வுற்று வியர்வை சொட்ட நிற்பதைக் கண்ட கண்ணன் அவள்மேல் இரக்கம் கொண்டு, உரலில் கட்டுண்டான்.

## மருத மரங்கள்

ஒரு நாள் யசோதை வீட்டு வேலைகளைச் செய்வதில் ஈடுபட்டிருந்தாள். முற்பிறவியில் குபேரனின் மக்களான நள குபேரன், மணிக்ரீவன் இருவரும் மருத மரங்களாக நந்த கோபன் வீட்டருகில் இருந்தார்கள். அவர்களுக்கு அளவுகடந்த செல்வமும், அழகும், ஆடம்பரமும் இருந்தது. அவர்களுடைய கர்வத்தின் காரணமாக நாரதரின் சாபத்தினால் மருத மரங்களாக மாறினார்கள். கண்ணன் அவர்களுக்கு இப்பொழுது விடுதலை அளிக்க விரும்பினான்.

ஒரு நாள் குபேரனின் குமாரர்கள் இருவரும் கந்தர்வப் பெண்களுடன் ஒரு நதியில் ஆடைகளில்லாமல் நீராடிக்கொண்டிருந்தனர். அப்பொழுது நாரதர் அவ்வழியே போக நேர்ந்தது. அந்த தேவ மாதர்களிருவரும் வெட்கப்பட்டும் நாரத முனிவரின் சாபத்துக்கு அஞ்சியும் தங்கள் ஆடைகளை எடுத்து அணிந்துகொண்டார்கள். ஆனால் யக்ஷர்களான குபேரனின் புதல்வர்கள் அவ்வாறு செய்யவில்லை. ஆகையால் நாரத முனிவர் அவர்களைச் சபித்துவிட்டார். ''குபேரனின் மக்களான இவர்களிருவரும் மிகவும் அறிவீனர்களாகவும் கர்வம் நிறைந்தவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்கள்

மரங்களாக மாறட்டும். ஆனால் அவர்கள் தங்கள் பழைய நிலையை மறக்கமாட்டார்கள். நூறு தேவ ஆண்டுகளுக்கு பின்னர், ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களைத் தொடும்போது அவர்கள் பழைய நிலையை அடைவார்கள்,'' என்று கூறினார். அவர்களிருவரும் இரண்டு மருத மரங்களாக உருமாறி பிருந்தா வனத்தில் இருந்தார்கள்.

கண்ணன் உரலை இழுத்துக்கொண்டு மருதமரங்களை நோக்கிப்போனான். இரண்டு மரங்களுக்கு இடையே நுழைந்து உரலை வேகமாக இழுத்தான். மரங்கள் இரண்டும் பலத்த ஓசையுடன் வேரோடு விழுந்தன. இரண்டு சித்த புருஷர்கள் அவற்றினின்றும் வெளிப்பட்டு தங்கள் தேககாந்தியால் அந்த இடத்தையே ஒளிமயமாக்கினார்கள். பின்னர் கண்ணனாகிய இறைவனைப் புகழ்ந்துகொண்டே வானத்தில் சென்று மறைந்தார்கள்.

அந்த பலத்த ஓசையைக் கேட்ட ஆண்களும் பெண்களும் அங்கு ஓடிவந்தார்கள். இரண்டு மருத மரங்களும் விழுந்து கிடப்பதைக் கண்டார்கள். அங்கிருந்த சிறுவர்கள் நடந்ததைச் சொன்னார்கள். ''இது கிருஷ்ணனின் வேலைதான். அவன் ஒருமுறை இழுத்ததும் மரங்களிரண்டும் பலத்த ஓசையுடன் விழுந்தன. அவற்றிலிருந்து இரண்டு பேர் வெளிப்பட்டதைப் பார்த்தோம்,'' என்று அவர்கள் சொன்னார்கள். ஆனால் கோபாலர்களும் கோபியர்களும் அவர்கள் சொன்னதை நம்பவில்லை. சிறு குழந்தையான கண்ணன் அந்த மரங்களை வேரோடு பெயர்த்தெடுக்க முடியுமா?'' என்று எண்ணி வியப்பும், திகைப்பும் அடைந்தார்கள்.

## பழ வியாபாரி

ஒரு நாள் தெருவில் ''பழம் வேண்டுமா?'' என்று கூவிக்கொண்டு பழம் விற்றுக்கொண்டு

போகும் ஒரு பெண்ணைக் கண்ணன் கண்டான். எல்லாவிதமான செயல்களுக்கும் வழிபாடுகளுக்கும் பலனை அளிப்பவனாகிய இறைவன் அவன்தான். இருப்பினும் ஒரு கை நிறைய தானியத்தை எடுத்துக் கொண்டு அவளிடம் பழங்கள் வாங்கப்போனான். அந்தப் பெண்மணி தானியத்தைப் பெற்றுக் கொண்டு இரண்டு கைகளிலும் நிறையப் பழங்களைக் கொடுத்தாள். தானியத்தைக் கூடையில் வைத்ததும், நவரத்தினக் கற்களால் கூடை நிரம்பியது.

## பிருந்தாவனம்

ஒருநாள் அறிஞனான உபநந்தன் என்னும் கோபாலன் மற்ற கோபாலர்களிடம் கீழ்க்கண்ட வாறு சொன்னான்: ''கோகுலத்தில் இனிமேல் நாம் தங்கியிருப்பது நல்லதல்ல. அநேக தீய அறிகுறிகள் தோன்றியுள்ளன. இங்கு தங்கினால் நம் குழந்தை களுக்குத் தீங்கு விளையும். கண்ணனைப் பூதனையிட மிருந்து மிகவும் சிரமப்பட்டுக் காப்பாற்றினோம். ஹரியின் கருணை இருந்ததால் வண்டி அவன்மேல் விழவில்லை. அசுரனால் ஆகாயத்தில் தூக்கிச் செல்லப் பட்டுக் கீழே விழுந்தபோதும் அவனைக் கடவுள்தான் காப்பாற்றினார். மருத மரங்கள் விழுந்தபோதும் அச்சுதன்தான் அவனைக் காப்பாற்றினான். நம் குழந்தைகளை அழைத்துக்கொண்டு, வேலைக்காரர் களுடனும் சுற்றத்தார்களுடனும் இன்றே பிருந்தா வனத்துக்குப் போய்விடுவோம். நம் பசுக்களுக்கும் கோபாலர்கள், கோபியர்கள் ஆகியவர்களுக்கும் தகுந்த இடம் அதுதான். அழகான மலைகளும், புல்வெளிகளும், பசுமையான செடிகொடிகளும், மருந்துப் பூண்டுகளும் தாவரமும் அங்கே இருக்கின்றன''.

''அதுதான் நல்லது ! நல்லதே சொன்னுய்'' என்று எல்லோரும் மகிழ்ச்சியுடன் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தார்கள். எல்லோரும் பிருந்தாவனத்துக்குச் சென்ருர்கள். பலராமனும் கண்ணனும் அங்கு கோவர்த்தன மலே, பிருந்தாவனம், யமுனே நதிக்கரை ஆகிய அழகான இடங்களேக் கண்டு பெருமகிழ்ச்சி அடைந்தார்கள். கோபாலர்களுடன் கன்றுகளே அன்புடன் காத்தார்கள். மற்ற சிறுவர்களுடனும் எவ்வித வேற்றுமையும் பாராட்டாமல் எளிமையுடன் பழகினுர்கள்.

## வத்சாஸுரனிடமிருந்து தப்புதல்

ஒரு சமயம் கண்ணனும் பலராமனும் யமுனே நதிக்கரையில் மற்ற மாடுமேய்க்கும் சிறுவர்களுடன் விளேயாடிக்கொண்டும் கன்றுகளே மேய்த்துக் கொண்டும் இருந்தார்கள் அப்போது ஓர் அசுரன் கன்றின் உருவத்தை எடுத்துக்கொண்டு மற்ற கன்றுகளோடு மந்தையில் கலந்துவிட்டான். கண்ணனேயும் பலராமனேயும் கொல்லவேண்டும் என்ற தீய எண்ணத்தோடு அவன் வந்திருந்தான். மற்ற கன்றுகளோடு ஒன்று சேர்ந்து நின்றுகொண்டிருந்த அசுரனேத் தெரிந்துகொண்ட கண்ணன் அவனேப் பலராமனுக்கு அடையாளம் காட்டினுன். பிறகு மெதுவாக அசுரனுக்கு அருகில் சென்ருன். அவனுடைய பின்னங் கால்களேயும் வாலேயும் சேர்த்துப் பிடித்து, தன்னுடைய தலேயைச் சுற்றிப் பலமுறை வேகமாகச் சுழற்றி, ஒரு மரத்தின் மேல் அவனே மோதினுன். அசுரன் இறந்துவிட்டான். மாடு மேய்க்கும் சிறுவர்கள் கண்ணனேப் புகழ்ந்தார்கள். தேவர்கள் கண்ணன்மீது மலர் மாரி பொழிந்தார்கள்.

## பகாசுரனிடமிருந்து விடுதலை

ஒருநாள் மாடுமேய்க்கும் சிறுவர்கள் தண்ணீர் குடிப்பதற்காக ஒரு குளத்திற்குச் சென்றார்கள். அங்கே கம்சனின் தோழனான ஓர் அரக்கன் ஒரு பெரிய கொக்கின் உருவத்தில் இருப்பதைப் பார்த்தார்கள். திடீரென்று அந்த அரக்கன் கண்ணனைத் தன் வலிமைபொருந்திய அலகினால் தாக்கும் நோக்கத்துடன் வேகமாக ஓடி வந்தான். கண்ணன் அசுரனுடைய அலகின் இரண்டு பகுதிகளையும் தன் இரண்டு கரங்களால் பிடித்துக்கொண்டு ஒரு புல்லைக் கிழித்தெறிவதுபோல் இரண்டாகப் பிளந்து அசுரனைக் கொன்றான். தேவர்கள் கண்ணன்மீது மலர்மாரி பெய்தனர்.

## அகாசுரனிடமிருந்து விடுதலை

ஒருமுறை கண்ணன் தன் தோழர்களுடன் காட்டில் விளையாடிக்கொண்டிருந்தான். அப்போது அங்கு ஒரு வலிமைபொருந்திய அரக்கன் வந்தான். அவன் பூதனை, பகாசுரன் ஆகியவர்களின் இளைய சகோதரன். கம்சனின் ஆணையின்படி அங்கு வந்திருந்தான். அமிர்தம் குடித்து அதனால் அமர நிலை பெற்றிருந்த தேவர்களும் அவனைக் கண்டு அஞ்சினார்கள். அவன் கண்ணனைக் கண்டவுடன் கீழ்க்கண்டவாறு எண்ணத் தொடங்கினான்: ''இவன்தான் என் தமையனையும் தமக்கையையும் கொன்றவன். கண்ணனைப் பலராமனுடனும் அவன் தோழர்களோடும் கொன்று பழி தீர்த்துக் கொள்வேன்.''

அந்தக் கொடிய அரக்கன் ஒரு யோசனை நீளமும் மலையைப் போன்ற பருத்த உடலும் கொண்ட ஒரு மலைப் பாம்பின் உருவத்தை எடுத்துக்கொண்டான்.

அதன் வாயின் மேல்பகுதியும் கீழ்ப்பகுதியும் வானத்தையும் பூமியையும் தொட்டன. கண்ணனையும் அவன் தோழர்களையும் விழுங்குவதற்காக அந்தப் பாம்பு குகைபோன்ற தன் வாயைத் திறந்து கொண்டே இருந்தது. சிறுவர்கள் எல்லோரும் அதைப் புரிந்துகொள்ளாமல் மகிழ்ச்சியால் கைகளைத் தட்டிக்கொண்டே உள்ளே சென்றார்கள். பாம்பு தன் வாயை மூடாமல் கண்ணன் நுழைவதற்காகக் காத்துக்கொண்டிருந்தது. கண்ணன் பாம்பின் வாயில் நுழைந்து அதன் தொண்டையில் நின்றுகொண்டு தன் உருவத்தைப் பெரிதாக்கினான். அரக்கன் மூச்சு விடமுடியாமல் திணறி மாண்டான். இவ்வாறு சிறுவர்களுக்கும் கன்றுகளுக்கும் புத்துயிர் அளித்த கண்ணன் சிரித்துக்கொண்டே அவர்களுடன் வெளியே வந்தான். அந்த அரக்கன் உடலிலிருந்து பேரொளி வெளிப்பட்டுக் கண்ணன் உடலோடு கலந்தது.

## பிரம்மதேவனின் மதிமயக்கம்

ஒரு சமயம் கண்ணன் மாடு மேய்க்கும் சிறுவர்களுடன் யமுனை நதிக்கரைக்குச் சென்றான். அங்கு அவர்கள் காலை உணவு சாப்பிட்டுக்கொண்டிருக்கும் போது, கன்றுகள் மேய்ந்துகொண்டே நாலா பக்கங்களிலும் பிரிந்து சென்றுவிட்டன. அவைகளைக் காணுமல் சிறுவர்கள் மிகவும் பயப்பட்டார்கள். அவைகளைத் தான் தேடிக் கண்டுபிடிப்பதாகச் சொல்லி, கண்ணன் சிறுவர்களைச் சமாதானப் படுத்தினான். அவ்வாறே அவைகளைத் தேடி கண்டு பிடிக்கப் புறப்பட்டான். அப்போது அங்கு பிரம்ம தேவன் வந்து அங்கிருந்த சிறுவர்கள் கன்றுகள் ஆகிய எல்லோரையும் ஓட்டிச்சென்று ஒரு மறைவான இடத்தில் அடைத்துவிட்டு மறைந்து விட்டான்.

கண்ணனால் கன்றுகளைக் கண்டுபிடிக்க முடிய வில்லை. எனவே மீண்டும் யமுனைக் கரைக்கு வந்த போது அங்கு விட்டுச் சென்ற சிறுவர்களையும் காண வில்லை. அது பிரம்மதேவனின் வேலைதான் என்பதை அறிந்தான்.

கன்றுகளைக் காணாமல். தவிக்கும் பசுக்களுக்கும் சிறுவர்களைக் காணாமல் தவிக்கும் அன்னைமார்க்கும் பிரம்மதேவனுக்கும்கூட மகிழ்ச்சியைக் கொடுக்க எண்ணி, தானே கன்றுகளாகவும் சிறுவர்களாகவும் மாறினான். கன்றுகள், சிறுவர்கள் ஆகியவர்களின் உருவங்களில் எவ்வித வேறுபாடும் தோன்றவில்லை. கண்ணனே சிறுவர்களின் உருவத்தில் இருந்ததால், கோகுலத்துப் பெண்கள் தங்கள் மக்களிடம் அதிக அன்பைச் சொரிந்தார்கள். பசுக்களும் தங்கள் கன்றுகளிடம் வழக்கத்திற்கு மாறாக அதிக அன்பு காட்டின.

இம்மாதிரியே ஓராண்டு காலத்துக்குக் கண்ணன் பல உருவங்களோடு பணியாற்றினான். ஓராண்டு காலம் முடிவதற்கு ஐந்தாறு நாட்களிருந்தபோது ஒருநாள் கோவர்த்தன மலையின் உச்சியில் பசுக்கள் மேய்ந்துகொண்டிருப்பதைப் பார்த்தான். பசுக்கள் தங்கள் கன்றுகள் கோகுலத்துக்கு அருகில் மேய்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தன. உடனே அளவு கடந்த பாசத்துடன் கன்றுகளை நோக்கி ஓடிவந்தன. அவைகள் ஓடி வந்த பாதை மனிதர்களும் விலங்கு களும் நடப்பதற்கு மிகவும் கடினமானது. பசுக் களின் மடிகளிலிருந்து பால் பெருகி வழிந்துகொண் டிருந்தது. புதிய கன்றுகளை ஈன்ற பசுக்கள்கூட இக்கன்றுகளிடம் ஓடிவந்து பாலூட்டத் தொடங் கின. கோகுலத்து மக்கள் தங்கள் மக்களிடம் முன்பிருந்ததைக் காட்டிலும் அதிகமாக அன்பும் பாசமும் காட்டினார்கள். இதைக் கண்ட பலராமன்

கீழ்க்கண்டவாறு எண்ணத் தொடங்கினான் : ''பல நாட்கள் பிரிந்திருந்த பசுக்களுக்கும் கன்றுகளுக்கு மிடையேகூட இவ்வளவு ஆழ்ந்த பாசத்தை நான் கண்டதில்லை. ஆய்பாடிப் பெண்களும் தங்கள் மக்களைக் கண்ணனைவிட அதிகமாக நேசிக்கிறார்கள். உண்மையில் கண்ணன்தான் யோக மாயையைக் காட்டியிருக்கிறான்''. பலராமன் சற்று கண்களை மூடித் திறந்தபோது அந்தச் சிறுவர்களும் கன்று களும் கண்ணனைத் தவிர வேறில்லை என்பதை உணர்ந்தான்.

''இறைவா ! இந்தக் கன்றுகளும் சிறுவர்களும் தேவர்களுமல்ல, முனிவர்களுமல்ல. அவர் உருவத் தில் ஒரே மாதிரியாகக் காணப்படுகிறார்கள். கிருஷ்ணா! இதன் மர்மம் என்ன? சற்று விளக்க மாகக் கூறு'' என்று பலராமன் கண்ணனிடம் கேட்டான். கண்ணன் நடந்ததை பலராமனிடம் விளக்கமாகச் சொன்னான். பிரம்மதேவன் நடத்திய சூதினை விளக்கினான். அதன்பின் பலராமன் நடந்த தெல்லாம் அறிந்துகொண்டான்.

பிரம்மதேவன் கோகுலத்துக்குத் திரும்பிவந்து சிறுவர்களையும் பசுக்களையும் பார்த்தான். தான் ஓராண்டுக்கு முன்னர் பார்த்த மாதிரியே கண்ணனும் சிறுவர்களும் கன்றுகளும் விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். தான் மாயை யால் மறைத்துவைத்திருப்பவர்களுக்கும் கண்ணன் மாயையால் உண்டாக்கப்பட்டவர்களுக்கும் எள்ளளவும் வேறுபாடில்லை. பிரம்மதேவன் கண்ணனைத் தன் மாயையால் மயக்க நினைத்தான். ஆனால், தானே கண்ணனின் மாயையில் மயங்கி விட்டான். ஒவ்வொரு கன்றையும், ஒவ்வொரு சிறுவனையும் கண்ணனாகவே கண்டான். எல்லோரும்

நீல நிறமுள்ளவர்களாய், மஞ்சள் பட்டாடை உடுத்தி இருந்தார்கள். நான்கு கரங்களுடன் தெய்வீக ஆயுதங்களை வைத்திருந்தார்கள். மகுடங்களையும், காதணிகள் ஆகியவைகளையும் அணிந்திருந்தார்கள். இந்த விந்தையான காட்சியைப் பார்த்த பிரம்மதேவன் வியப்பும் திகைப்பும் அடைந்தான். கண்ணன் மாயையாகிய திரையை விலக்கினான். பிரம்மதேவன் மயக்கம் தெளிந்து மறுபடியும் கண்ணன் தன் தோழர்களையும், கன்றுகளையும் தேடிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். பிரம்மதேவன் கண்ணன் பாதங்களில் பலமுறை வீழ்ந்து வணங்கி, கண்களில் நீர் பெருகக் கண்ணன் புகழ் பாடினான்.

## தேனுகாசுரவதம்.

ஒருநாள், பலராமன், கண்ணன் ஆகியவர்களின் நெருங்கிய விளையாட்டுத் தோழனாகிய, சிரிதாமனும், சுபலன், ச்தோகன் என்பவர்கள் அவர்களிடம் வந்து, ''இங்கிருந்து சிறிது தூரத்தில் ஒரு பனந்தோப்பு இருக்கிறது. அந்த இடம் மிகவும் அழகாக இருக்கின்றது. தோப்பிலுள்ள மரங்களில் பனம்பழங்கள் பழுத்துக் குலுங்குகின்றன. ஆனால் தோப்புக்குள் யாரும் நுழைய முடியாது. அங்கே தேனுகாசுரன் என்ற அரக்கன் தன் சுற்றத்தினர் பலருடன் வசிக்கிறான். மக்கள் தோப்புக்குள் நுழைவதைத் தடுக்கிறான். அவன் கழுதை உருவத்திலிருந்து கொண்டு இதுவரை பலரைக் கொன்றிருக்கிறான். அதனால் மக்கள் பயத்தினால் அந்த தோப்புக்குள் நுழைவதில்லை. இங்கிருந்தே பழங்களின் நல்ல மணத்தை உணர முடிகிறது. அவைகளைத் தின்ன எங்களுக்கு மிகவும் ஆவலாக இருக்கின்றது,'' என்று சொன்னார்கள்.

பலராமன் தைரியமாகத் தோப்புக்குள் நுழைந்து மரங்களை வேகமாக உலுக்கினுன். மரங்களிலிருந்து நிறைய பழங்கள் உதிர்ந்தன. பழங்கள் விழும் ஓசையைக் கேட்ட தேனுகாசுரன் வேகமாக ஓடிவந்து தன் பின்னங்கால்களால் பலராமன் மார்பில் உதைத்தான். பலராமன் அசுரனின் பின்னங்கால்கள் இரண்டையும் உறுதி யாகப் பிடித்துக்கொண்டு, அவனைத் தன் தலையைச் சுற்றி வேகமாகச் சுழற்றி ஒரு பெரிய பனைமரத்தின் மீது வீசி எறிந்தான். அசுரன் கீழே விழுந்து இறந்தான். அவனுடைய உறவினர்கள் கூட்டமாக ஓடிவந்து பலராமனையும் கண்ணனையும் தாக்கினுர் கள். பலராமனும் கண்ணனும் அவர்கள் எல்லோரையும் கொன்ருர்கள். அவர்களுடைய தோழர்கள் பனம்பழங்களை ஆசைதீரப் புசித்தார் கள் தேனுகாசுரன் இறந்தபிறகு, மக்கள் அச்ச மின்றி அந்தப் பனந்தோப்புக்குள் நுழைந்தார்கள். ஆடுமாடுகளும் அங்கிருந்த புல்தரையில் பயமின்றி மேயத் தொடங்கின.

## விஷத்தை அருந்துவதிலிருந்து பசுக்களையும் சிறுவர்களையும் காப்பாற்றுதல்

ஒருசமயம் கண்ணன், பலராமனைத்தவிர மற்ற தோழர்களை அழைத்துக்கொண்டு பிருந்தாவனக் காட்டிற்குள் அலைந்து திரிந்த பிறகு யமுனை நதியை அடைந்தான். சிறுவர்களும் மாடுகளும் கன்று களும் கோடையின் வெப்பத்திஞல் துன்பப்பட்டு, தாகத்திஞல் தவித்தார்கள். யமுனை நதியின் விஷம் கலந்த நீரைக் குடித்து சிறிது நேரத்தில் நதிக்கரை யில் உயிரற்று விழுந்தார்கள். தன் தேவாமிர்தம் போன்ற அருள்நிறைந்த பார்வையால் கண்ணன் அவர்களை மீண்டும் உயிர் பெற்றெழச் செய்தான்.

அவர்கள் நினைவு திரும்பியதும் நீர்க்கரையிலிருந்து எழுந்து ஒருவரையொருவர் வியப்புடன் பார்த்துக் கொண்டார்கள். யமுனை நதியின் விஷம் கலந்த நீரைப் பருகியதால் இறந்து விழுந்ததையும், கண்ணனின் அருள் சுரக்கும் பார்வையால் மீண்டும் உயிர் பெற்றெழுந்ததையும் அறிந்து மகிழ்ந்தார்கள்.

## காளிய நடனம்

ஒரு காலத்தில் கருடன் பாம்புகளைக் கொன்று தின்று வந்தான். எனவே பாம்புகள் கருடனுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டன. அதன் படி ஒவ்வொரு மாதமும் அமாவாசையன்று ஒரு பாம்பு வீதம் கருடனுக்கு உணவாக கொடுத்து வந்தன. எல்லா பாம்புகளும் இம் மாதிரி தங்கள் பங்கைச் செலுத்தி வந்ததால், கருடனுக்கு இந்த ஏற்பாட்டால் மிகவும் மகிழ்ச்சியும் திருப்தியும் ஏற்பட்டது. ஆனுல் காத்ருவின் மகனுன காளியன் என்னும் பாம்பு, தான் மிகவும் வலிமையுள்ளவன் என்ற கர்வத்தின் காரணமாக இந்த உடன்படிக் கையின்படி கருடனுக்கு உணவு அளிக்காததுடன் மற்றவர்களால் கருடனுக்குக் கொடுக்கபபட்ட உணவையும் தானே எடுத்துக்கொண்டது. அதனுல் கோபம் கொண்ட கருடன் காளியனைத் தாக்கினுன். காளியன் யமுனை நதியிலுள்ள ஓர் ஆழமான மடுவில் பாதுகாப்பாக மறைந்து கொண்டான்.

அதற்குமுன் ஒரு சமயம் அந்த மடுவிலுள்ள ஒரு மீனைப் பிடித்து உண்ணப் போகும் போது, சௌபரி என்ற முனிவர் அந்த மீனை உண்ண வேண்டாம் என்று கருடனிடம் சொன்னுர். முனிவரின் வார்த்தையைக் கருடன் சிறிதும் பொருட்படுத்தவில்லை. மற்ற மீன்களின்

அழுகுரலால் உள்ளம் உருகிய முனிவர் அவைகளைக் காப்பாற்ற எண்ணி, "இனி அந்த மடுவிற்கு அருகில் வந்தால் நீ இறந்து போவாய்", என்று கருடனைச் சபித்தார்.

காளியன் இந்த சாபத்தைப்பற்றி அறிந்திருந்த தால் தன் குடும்பத்துடன் அந்த மடுவிற்கு வந்துவிட்டான்.

மிகவும் கொடிய விஷமுள்ள பாம்பினால் அந்த மடுவில் உள்ள நீர் விஷம் கலந்ததாக மாறி இருக்கின்றதென்பதைக் கண்ணன் உணர்ந்தான். எனவே அந்தப் பாம்பை வெளியே துரத்திவிட்டு நீரைத் தூய்மைப்படுத்த விரும்பினான். தன் ஆடையை வரிந்துகட்டிக் கொண்டு, கரையிலுள்ள ஒரு கடம்ப மரத்தின் மேலேறி அந்த மடுவுக்குள் குதித்தான். பாம்பும் கண்ணனை எதிர்த்துக் கடுமை யாகப் போராடி உடலில் பல இடங்களில் கடித்தது. தன் உடலால் கண்ணன் உடலை நன்றாகச் சுற்றிக் கொண்டது. பசுக்கள் கண்ணீர் விட்டழுதன. சிறுவர் மூர்ச்சித்து விழுந்துவிட்டனர். நந்தகோ பனும் மற்ற கோபாலர்களும் இந்த காட்சியைக் கண்டு மனம் வருந்தி அழுதார்கள்.

கண்ணன் பாம்பின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு அதனுடன் விளையாடத் தொடங்கினான். அதன் தலைகள் மீது ஏறி நடன மாடத் தொடங்கினான். காளியனுக்கு ஆயிரம் தலைகளிருந்தாலும், அவற்றில் முக்கியமானவை நூறு. அவை வாய்களின் வழியே இரத்தத்தைக் கக்கின. கண்ணன் காளியனுடைய ஒவ்வொரு தலை யின் மீதும் குதித்து விளையாடினான். காளியனின் உடம்பு முழுவதும் துவண்டு போயிற்று. தன்னைக் காப்பாற்றும்படி இறைவனை வேண்டினான்.

காளியனுடைய மனைவிமாரும் கண்ணனைப்போற்றி வணங்கி, கணவனுடைய உயிருக்காக மன்றாடினார்கள். கண்ணன் மனமிரங்கித் தன் நடனத்தை நிறுத்தினான். காளியனுக்கு மெதுவாக நினைவு திரும்பியது.

''கொடிய பாம்பே! இனிமேல் இந்த மடுவில் நீ தங்கி இருக்கக்கூடாது. உன்னுடைய மனைவி மக்கள் சுற்றத்தினரோடு கடலுக்குள் சென்றுவிடு. கருடனுக்குப் பயந்து ரமணகத் தீவை விட்டு உன் மனைவி மக்களோடு இங்கு வந்தாய் என்பதை நான் அறிவேன். உன் தலைகளில் என் காலடிகளின் அடையாளங்கள் பதிந்திருப்பதால், கருடன் உன்னைத் தொடமாட்டான்'' என்று கண்ணன் காளியனிடம் கூறினான். உடனே காளியன் தன் மனைவி மக்களோடு ரமணகத் தீவுக்குச் சென்று விட்டான். யமுனையிலுள்ள நீரும் தேவாமிர்தம் போன்று இன்சுவையுள்ளதாக மாறிற்று.

## காட்டுத் தீயை விழுங்குதல்

கோடைக் காலத்தின் கடும் வெப்பத்தினால் காட்டிலிருந்த மரங்களெல்லாம் நன்றாக உலர்ந்து விட்டன. நள்ளிரவில் எதிர்பாராமல் காட்டில் தீப் பிடித்து எரியத் தொடங்கிற்று. தீ பரவி கோகுலத்தை நாலா பக்கத்திலிருந்தும் சூழ்ந்து கொண்டது. அங்கிருந்த மக்கள் எல்லோரும் தீக்கிரையாகிவிடும் ஆபத்து ஏற்பட்டது. ''கண்ணா, இந்தப் பயங்கரமான தீக்கு இரையாவதிலிருந்து எங்களைக் காப்பாற்று. நாங்கள் இறப்பதற்கு அஞ்சவில்லை. உன் பொற்றாமரை அடிகளை விட்டு பிரிந்திருக்க எங்களால் முடியாது,'' என்று கண்ணனைச் சரணடைந்து வேண்டினார்கள்.

அடியவர்களின் துயரத்தைக் கண்ட கண்ணன் தன் வாயைத் திறந்து அந்தக் கொடிய காட்டுத் தீயை விழுங்கினுன். கண்ணன் அளவு கடந்த ஆற்றல் படைத்தவன். எனவே அவனுடைய இந்தச் செயல் எவ்வகையிலும் வியப்புக்குரியதல்ல.

## பிரலம்பாசுரன்

ஒரு நாள் பலராமனும், கண்ணனும் மற்ற இடைச் சிறுவர்களும் பவளங்களாலும், மயிலிறகுகளாலும் அழகிய காட்டு மலர்களாலும் தங்களை அலங்கரித்துக்கொண்டு உரத்த குரலில் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் இருந்தார்கள். அப்பொழுது பிரலம்பன் என்னும் அசுரன் ஓர் இடைச் சிறுவனைப் போன்ற உருவத்துடன் மற்ற சிறுவர்களோடு கலந்துவிட்டான். பலராமனையும் கண்ணனையும் தூக்கிக்கொண்டு சென்றுவிடுவதே அவன் நோக்கம். எல்லாமறிந்த கண்ணன் அவனை அடையாளம் கண்டுகொண்டான். அவனைக் கொல்லும் நோக்கத்துடன் அவனுடன் நட்புகொள்வதைப் போல் நடித்தான். தன் நண்பர்களிடம் ஒரு விளையாட்டைப்பற்றிய தன் திட்டத்தைத் தெரிவித்தான். அனைவரும் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து விளையாடலாமென்று யோசனை சொன்னுன். அதன்படியே அவர்கள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்தார்கள். ஒரு பிரிவினர் பலராமன் தலைமையிலும், மற்றவர்கள் கண்ணன் தலைமையிலும் இருந்தார்கள். தோல்வியடைந்த கட்சியினர் வெற்றிபெற்றவர்களை ஒரு குறிப்பிட்ட தூரம் வரையிலும் தங்கள் முதுகின்மேல் ஏற்றிச் செல்லவேண்டும்.

விளையாட்டில் பலராமனும் அவன் கட்சியைச் சேர்ந்தவர்களும் வெற்றிபெற்ருர்கள். எனவே கண்ணன் சிரிதாமாவையும், பத்ரசேனன் விருஷபனை

யும், பிரலம்பன் பலராமனையும் முதுகில் சுமந்தார்கள். பிரலம்பன் பலராமனைத் தூக்கிக்கொண்டு குறிப்பிட்ட இடத்தைத் தாண்டி ஓடத்தொடங்கினான். பலராமனுக்கு ஏதோ தீங்கு நடக்கப் போகின்றது என்று சந்தேகமேற்பட்டது. பிரலம்பன் பழையபடி தன் உண்மையான பெரிய வடிவத்தை எடுத்துக்கொண்டான். பலராமன் தன் வலிமை பொருந்திய கைகளால் அசுரன் தலையில் ஓங்கி அடித்தான். அசுரன் இரத்தம் கக்கிக்கொண்டு வீழ்ந்து இறந்தான். சிறுவர்களெல்லாம் மகிழ்ச்சி ஆரவாரத்துடன் பலராமனைப் புகழ்ந்து பாராட்டினார்கள்.

## காட்டுத் தீ

மாடு கன்றுகள் பத்ரிகா வனத்திலிருந்து வழி தவறிப் போய்விட்டன. திடீரென்று காட்டில் பெருந்தீ பிடித்துக்கொண்டது. மாடு மேய்க்கும் சிறுவர்கள் கண்ணனிடம் சரணடைந்தார்கள். ''கண்ணா! எங்கள் அன்பனே! நாங்கள் உன் திருவடிகளையே சரணாக அடைகிறோம். இந்த பயங்கர நெருப்பு எங்களைப் பொசுக்கிச் சாம்பலாக்கி விடும்போல் தோன்றுகிறது. எல்லையற்ற ஆற்றல் படைத்த இறைவன் நீ. எங்களைக் காப்பாற்று. எங்களுக்கு உன்னைத் தவிர வேறு இறைவனில்லை. உன்னையே நம்பி இருக்கிறோம்'' என்று கதறினார்கள்.

''அன்பான தோழர்களே! பயப்பட வேண்டாம். உங்கள் கண்களைச் சற்று மூடிக் கொள்ளுங்கள்,'' என்று கண்ணன் சொன்னதும், அந்தச் சிறுவர்கள் தங்கள் கண்களை மூடிக்கொண்டார்கள். கண்ணன் சொன்னதும் மீண்டும் கண்களைத் திறந்தபோது, தாங்கள் பழையபடியே பத்ரிகா வனத்தில் இருப்பதைக் கண்டார்கள்.

தங்கள் பசுக்கள் எல்லாம் வியக்கத்தக்க முறையில் நெருப்பினின்றும் காப்பாற்றப்பட்டதை உணர்ந்து மிகவும் திகைப்படைந்தார்கள். கண்ணனுடைய யோக சக்தியையும், தாங்கள் காட்டுத் தீயிலிருந்து மீண்ட விந்தையான செயலையும் பார்த்தபோது கண்ணன் ஒரு மனிதப் பிறவி அல்ல; அவன் ஒரு தெய்வப் பிறவி என்று அவர்கள் எண்ணினார்கள்.

## வேணுகானம்

## (புல்லாங்குழலிசை)

இலையுதிர்காலத்தில் கானகம் அழகாகக் காட்சியளித்தது. தண்ணீர் மிகவும் தெளிந்து காணப்பட்டது. மெல்லிய காற்று வீசிக்கொண்டிருந்தது. இந்த அழகான காட்சியைக் கண்டு மகிழ, பலராமன், பசுக்கள் மாடு மேய்க்கும் சிறுவர்கள் ஆகியவர்களுடன் கண்ணன் கானகம் சென்றான். அங்கு சென்றதும் தன் புல்லாங் குழலை எடுத்து ஊதத் தொடங்கினான். அந்த இசையைக் கேட்டதும் கோபிகைகள் தங்களை மறந்தார்கள். குழலிசை கேட்பவர்களின் உள்ளத்தைக் கவர்ந்தது.

''இந்த புல்லாங்குழல் பெரிய புண்ணியம் செய்து இருக்கவேண்டும். அதனால்தான் கண்ணனுடைய இதழ் அமுதத்தை நேரடியாக உண்ணும் பெரும்பேறு அதற்குக் கிடைத்திருக்கின்றது. அதற்கு உயிரூட்டி வளர்த்த தண்ணீர் மகிழ்ச்சியால் திளைக்கின்றது. அந்தக் குழலைக் கொடுத்த செடி, தேன் சொரிவதன் மூலம் ஆனந்தக் கண்ணீர் வடிக்கின்றது. அடியவர்கள் குலத்திலே அடியவர்கள் பிறக்கும் போது ஆனந்தக் கண்ணீர் சொரிந்து மகிழ்வதைப் போன்று இருக்கின்றது'' என்று கோபியர்கள் சொன்னார்கள்.

மற்றும் சிலர், ''கண்ணனுடைய காலடிபட்ட தால் இந்த மண்ணுலகத்தின் பெருமையை பிருந் தாவனம் வைகுந்தம் வரை பரப்பி இருக்கின்றது. கண்ணனின் தாமரைத் தாள்கள் பட்டதின் காரண மாக பிருந்தாவனம் எவ்வளவு அழகாகக் காணப் படுகின்றது ! பிருந்தாவனத்துக்கு நிகரான இடம் இவ்வுலகில் வேறு எங்கும் இல்லை,'' என்று சொன்னார்கள்.

கண்ணன் தன் புல்லாங்குழலில் மனதை மயக் கும் இன்னிசை வாசிக்கும்பொழுது, இசைக்கேற்ற படி மயில்கள் நடனமாடுகின்றன. அந்த இசையை மேகங்களின் மெல்லிய முழக்கம் என அவை நினைக் கின்றன. குழலிசையைக் கேட்டு மற்ற விலங்கு களும் அசைவற்று நிற்கின்றன. மான்களும் அந்த இசையைக் கேட்டு தங்கள் அன்பான பார்வையால் வணக்கத்தைச் செலுத்துகின்றன. தேவலோகப் பெண்களும் இந்த இசையில் மூழ்கி மெய் மறந்து போகின்றார்கள். பசுக்கள் தங்கள் காதுகளை உயர்த்தி, கண்களில் ஆனந்தக் கண்ணீரைச் சொரிந்துகொண்டு அசைவற்று நின்று கொண்டு அந்த இசையமுதத்தைப் பருகுகின்றன. கன்றுகள் தாங்கள் குடித்த பால் கடைவாய் வழியே வழிய இசையை ஆவலுடன் கேட்டு நிற்கின்றன. பறவை களும்கூட மரங்களில் உயரமான கிளைகளில் அமர்ந்து மனதை மயக்கும் இசையை அமைதியாகக் கேட்கின்றன. ஆறுகளிலுள்ள நீர்ச்சுழல்களும் கூட கண்ணனைச் சந்திக்கத் தங்களுக்குள்ள ஆவலை வெளிப்படுத்துகின்றன. ஆறுகள் கண்ணனிடம் தங்களுக்குள்ள அன்பை வெளிப்படுத்துகின்றன. கண்ணனின் இனிய இசையை கேட்பதற்காக ஓடா மல் நின்று விடுகின்றன. அலைகளாகிய தங்கள் கை களில் தாமரை மலர்களைச் சொரிந்து கண்ணனின் திருவடிகளைத் தழுவிக்கொள்வதற்காக எட்டிப்

பிடிக்கின்றன. வானத்திலுள்ள மேகங்கள் அவனுக்குமேலே ஒரு குடையைப் போல நிற்கின்றன. வெயிலில் அவன் குழலிசைக்கும் பொழுது, சிறு வெண்ணிற மலர்களால் அர்ச்சிப்பதுபோல அவன் மேல் நீர்த்துளிகளைப் பொழிகின்றன. இவ்வாறு கண்ணன் திருவடிகளில் தங்களை அர்ப்பணித்துக் கொள்கின்றன.

மலைகளின் இளவரசான கோவர்த்தனகிரி பெரும் பேறுபெற்றது. ஏனெனில் அதன் சரிவுகளில் கண்ணன் மாடுகளை ஓட்டிச் செல்கிறான், அது வேர்களையும் சுவையுள்ள பழங்களையும், தூய நீரையும் அவைகளுக்குக் கொடுத்து உபசரிக்கின்றது. குழலிசை என்ன விந்தையை விளைவிக்கின்றது!

கண்ணனின் பலவிதமான விளையாட்டுகளைப் பற்றி விவரித்துக்கொண்டும் பாடிக்கொண்டும் கோபியர் தங்களையே மறந்துவிடுவார்கள்; அவர்கள் கண்ணனோடு ஒன்று கலந்து விடுகிறார்கள்.

## ஆடைகளைக் கவர்தல்

குளிர்காலம் (ஹேமந்தருது) வந்தது. நந்த கோகுலத்துப் பெண்கள் விரதத்தை அனுசரித்து காத்யாயனி தேவியை (துர்க்கையை) வழிப்பட்டார்கள் தூய்மையான உணவையே உண்டார்கள். "காத்யாயனி! பிரபஞ்சத்தை ஆள்பவளே! விந்தையான யோக ஆற்றல் படைத்த தேவதையே! நந்தகோபனின் குமரன் எங்களுக்குக் கணவனாக அமையவேண்டும். உன்னடியை வணங்குகின்றோம்" என்று துதித்தார்கள். இந்த விரதத்தை ஒரு மாத காலம் அனுஷ்டித்தார்கள். ஒவ்வொரு நாளும் விடியற்காலையில் யமுனை நதியில் நீராடினார்கள். அவர்கள் ஒரு நாள் தங்கள் ஆடைகளைக் களைந்து

யமுனையின் கரையில் வைத்துவிட்டு, யமுனை நதிக்குள் இறங்கி நீராடிக்கொண்டிருந்தார்கள். கண்ணனின் பெருமைகளைப் பாடிக் கொண்டு, மிகவும் மகிழ்ச்சியோடு நீராடிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களுடைய விரதத்தின் நோக்கத்தை நிறைவேற்றும் எண்ணத்துடன் கண்ணன் தன் நண்பர்களுடன் யமுனை நதிக்கரைக்குப் போனான். அவர்களுடைய ஆடைகளை எல்லாம் எடுத்துக்கொண்டு அருகிலுள்ள கடம்ப மரம் ஒன்றின்மேல் ஏறிக் கொண்டான். பெண்களைக் கரையேறி வந்து ஆடைகளைப் பெற்றுக்கொள்ளும்படி சொன்னான். அவர்களும் அவ்வாறே வந்தபோது, கண்ணன் அவர்களுடைய ஆடைகளைத் திருப்பிக் கொடுத்து விட்டான்.

''தூய்மையும் நற்பண்பும் நிறைந்த பெண்களே! உங்கள் எண்ணம் எனக்குத் தெரியும். உங்கள் விரதத்தை நன்கு நிறைவேற்றி இருக்கிறீர்கள். என்னை வழிபட விரும்புகிறீர்கள். நான் அதை ஏற்றுக்கொள்கிறேன். தங்கள் மனதையும் உள்ளத்தையும் என்னிடம் செலுத்துபவர்கள், அவர்கள் ஆசைப்படும் உலகியல் பொருள்களைப் பெறமாட்டார்கள். ஏனெனில் நானே அவர்கள் விரும்பும் பொருளாவதால், அவர்களுடைய மற்ற ஆசைகள் எரிக்கப்படுகின்றன. வறுக்கப்பட்ட அல்லது வேகவைக்கப்பட்ட விதை முளைக்காது. என்னை நோக்கிச் செலுத்தப்பட்ட ஆசைகள் உலகியல் இன்பங்களை அடைய உதவா. கோகுலத்துக்குத் திரும்பிச் செல்லுங்கள். நீங்கள் காத்யாயனி தேவியை வழிபட்ட நோக்கம் நிறைவேறிவிட்டது. சரத்கால இரவுகளில் நீங்கள் என்னுடன் 'விளையாடலாம்'' என்று கண்ணன் கூறினான்.

## கண்ணனும் வேத வேள்வியும்

ஒருசமயம் பலராமனுடனும் மற்ற சிறுவர்களுடனும் கண்ணன் பிருந்தாவனத்திலிருந்து வெகுதூரம் சென்ருன். அப்போது கோடைக் காலம். சூரியன் வெப்பம் மிகவும் கடுமையாக இருந்தது. மரநிழல் இருந்தது. ''நண்பர்களே! இங்கே பாருங்கள்! இந்த மரங்கள் எவ்வளவு பெருந்தன்மை படைத்தவை! அவைகள் மற்றவர்களுடைய நன்மைக்காகவே வாழ்கின்றன. காற்ருலும், மழையாலும், வெய்யிலாலும், பனியாலும் அவைகள் துன்பப்படுகின்றன. அவைகளின் வாழ்க்கைதான் மிகவும் சிறந்தது. அவைகள் மற்ற உயிர்களேக் காப்பாற்றுகின்றன. தம்மிடம் வரும் எவரையும் ஏமாறச் செய்வதில்லே. ஒவ்வொருவருக்கும் எதையாவது கொடுக்கின்றன. இலே, பூ, பழம், வேர், பட்டை, நறுமணம், ரசம், வீறகு, மொக்கு, பசை, சாம்பல், கரி, இளம் குருத்து போன்றவைகளேக் கொடுத்து மற்ற எல்லா உயிரினங்களின் தேவைகளேப் பூர்த்தி செய்கின்றன. அதுபோன்று மற்ற உயிர்களுக்குத் தங்கள் வாழ்க்கை, செல்வம், அறிவு, சொல் ஆகியவற்ருல் உதவி, நன்மை செய்பவர்களே உண்மையாக வாழ்கிருர்கள்'' என்று கண்ணன் தன் நண்பர்களிடம் கூறினுன்.

அவர்களில் சிலருக்குப் பசி ஏற்பட்டது. அவர்கள் கண்ணனிடம் சென்று, ''கண்ணு! நாங்கள் பசியால் துன்பப்படுகிருேம். அதைத் தணிப்பதற்கு ஏதாவது வழிசெய்ய வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள். ''நண்பர்களே! இங்கிருந்து சற்று தூரத்திலுள்ள ஓரிடத்தில் வேதங்களே நன்கு ஓதியுணர்ந்த அந்தணர்கள் விண்ணுலகத்தை அடைவதற்காக ''ஆங்கீரசம்'' என்னும் பெரிய

வேள்வி ஒன்றை நடத்துகிறுர்கள். அந்த யாக சாலேக்குச் சென்று எனது பெயரைச் சொல்லி அவர்களிடம் உணவு கேளுங்கள்'' என்று கண்ணன் சொன்ஞன்.

அவ்வண்ணமே சிறுவர்களும் யாகசாலேக்குப் போய் அந்தணர்களிடம் உணவு தரும்படிக் கேட்டார்கள். அந்தணர்கள் சிறுவர்களுடைய சொற்களே மதிக்கவில்லே. கண்ணனே ஒரு சாதாரண மனிதஞகக் கருதி அவன் வேண்டுகோளே ஏற்றுக் கொள்ளவில்லே. வேள்வியையே அவர்கள் முக்கிய மாகக் கருதிஞர்களேதவிர, வேள்விகளின் தலேவனே முக்கியமாகக் கருதவில்லே. தாங்கள் கண்ணனேவிட உயர்ந்தவர்கள் என்று நினேத்தார்கள். அந்தணர் கள் ''உண்டு'' அல்லது ''இல்லே'' என்று எந்தவித மான பதிலேயும் சொல்லாததால், சிறுவர்கள் ஏமாற்றத்துடன் கண்ணனிடம் திரும்பிவந்து நடந் ததைச் சொன்ஞர்கள். கண்ணன் அதைக்கேட்டு நகைத்து அந்தணர்களின் மனேவியாரிடம் சென்று கேட்கும்படி சிறுவர்களிடம் சொன்ஞன். அவ் வாறே சிறுவர்கள் கேட்டதும், அந்தணர்களின் மனேவிமார், தங்கள் கணவன்மார், சகோதரர்கள், உறவினர் ஆகிய எல்லோரும் தடுத்தும் கேட்காமல், தட்டுகள் நிறைய எல்லா வகையான உணவுப் பண்டங்களேயும் எடுத்துக்கொண்டு கண்ணனிடம் விரைந்து வந்தார்கள்.

''பாக்கியசாலிகளான பெண்மணிகளே! உங் களுக்கு நல்வரவு. தயவு செய்து அமருங்கள். உங் களுக்கு என்ன வேண்டும்? என்னேப் பார்ப்பதற்கு நீங்கள் வந்திருக்கிறீர்கள். நான்தான் ஆன்மா. எனவே மிகவும் பிரியமானவன். ஆன்மாவைப் பற்றிக் கவலேப்படுகின்றவர்கள் என்னிடம் நிபந் தனேயற்றதும் மாருததுமான பக்தியுடையவர்கள்.

உயிர், அறிவு, மனம், உடல், மனைவி, மக்கள், சுற்றத்தார், செல்வம் ஆகிய எல்லாவற்றையும் ஆன்மாவின் பொருட்டுத்தான் நேசிக்கிறோம். ஆன்மாவைவிடப் பிரியமானது என்ன இருக்க முடியும்? இப்போது என்னைப் பார்த்துவிட்டீர்கள். உங்கள் கணவன்மாரிடம் திரும்பிச் செல்லுங்கள். உங்கள் துணையுடன்தான் அவர்கள் வேள்வியை நடத்த வேண்டும்,'' என்று கண்ணன் அவர்களிடம் சொன்னான். ''இறைவா! உன் திருவடியைத்தான் நாங்கள் தேடிவந்தோம். எங்கள் சுற்றத்தாரைத் துறந்து வந்துவிட்டோம். உன் திருவடிகளிலிருந்து வீழ்ந்த துளசி தளங்களாலான மாலையை எங்கள் கூந்தலில் அணிந்து கொள்ள எங்களை அனுமதி. எங்கள் கணவன்மாரும், பெற்றோரும், மக்களும், சகோதரர்களும், சுற்றத்தாரும் எங்களை மீண்டும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். உலகிலுள்ள மற்றெல்லாரும்கூட எங்களை விட்டு விலகிவிடுவார்கள். எங்களுக்கு வேறு துணை எவரும் இல்லை. உன் திருவடிகளையே சரணாக அடைந்துவிட்டோம். அருள்கூர்ந்து எங்களைக் காப்பாற்று. நாங்கள் உன் அடியவர்களாகவே இருக்கிறோம்,'' என்று அந்தப் பெண்கள் கண்ணனிடம் வேண்டினார்கள்.

''பெரும் பேறு பெற்ற பெண்மணிகளே! உங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் செல்லுங்கள். உங்கள் கணவன்மாரும், மக்களும், பெற்றோரும் உங்களை வெறுக்கமாட்டார்கள். என் ஆணையின்படி மக்கள் எல்லோரும், தேவர்களும் உங்கள் நடத்தையை மெச்சுவார்கள். நீங்கள் என்னால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றீர்கள். எனவே உலகெங்கும் நீங்கள் போற்றப்படுவீர்கள். அன்பும், பக்தியும், செலுத்த நீங்கள். என் அருகிலேயே இருந்து என்னுடன் தொடர்பு கொள்ள வேண்டியதில்லை. உளமார என்னை நினைத்திருங்கள்.

விரைவில் என்னை அடைவீர்கள்,'' என்று கண்ணன் அவர்களிடம் கூறினன்.

அதன் பிறகு அப்பெண்மணிகள் யாகசாலைக்குத் திரும்பி வந்தார்கள். அந்தணர்கள் அவர்கள் நடத்தையைப்பற்றிக் குறைகூறவில்லை. அந்த அந்தணர்கள் கண்ணன் இறைவன்தான் என்று அறிந்து கொண்டதும், தங்கள் நடத்தைக்கு வருந்தினர்கள். கம்சனிடம் இருந்த அச்சத்தினல் அவர்கள் பிருந்தாவனத்துக்குப் போகமுடியவில்லை. தம்தம் வீடுகளிலேயே கண்ணனை வழிபட்டார்கள்.

## இந்திரன் வழிபாட்டை நிறுத்துதல்

ஒரு நாள் கோகுலத்து மக்கள் இந்திர வழிபாட்டுக்காகத் தயார் செய்து கொண்டிருப்பதைக் கண்ணன் கண்டான். ''தந்தையே! எதற்காக இந்தக் கொண்டாட்டம்? அதன் நோக்கம் என்ன? யாருக்காக நடத்தப்படுகிறது? அந்த விழா யாரால், எப்படி நடத்தப்படுகிறது?'' என்று கண்ணன் தன் தந்தையிடம் கேட்டான்.

''குழந்தாய்! இந்திரன் மேகங்களுக்கு அதிபதி. அவனை வணங்கினல் நமக்கு மழையைக் கொடுப்பான். மழைதான் உலகிலுள்ள யாவருக்கும் உயிரூட்டுகிறது. எனவே மக்கள் இந்த மாதிரி விழாக் கொண்டாடி இந்திரனை வழிபடுகிருர்கள். விழாவின் இறுதியில் மீதியிருக்கும் பொருள்களை நம் வாழ்வில் தர்மம் (அறம்) அர்த்தம் (பொருள்) காமம் (இன்பம்) ஆகியவற்றைப் பெறப் பயன் படுத்துகிறேம். நம் முயற்சிகளுக்குப் பயன் தருபவன் இந்திரன்'', என்று நந்தன் பதில் கூறினன்.

''தந்தையே! கர்மத்தின் பயனுக ஒரு உயிர் பிறக்கின்றது. கர்மத்தின் விளைவாக அது மறைந்து போகிறது. மனிதர்களின் பிறப்பும் இறப்பும் அவரவர்கள் கர்மவினையின் பயனுக ஏற்படுகின்றது. இன்பம், துன்பம், பயம், பாதுகாப்பு ஆகியவை எல்லாம் கர்மத்தின் விளைவுகள்தாம். கர்மத்தின் பயனை அளிப்பதற்கு ஒரு கடவுள் இருந்தால் அவரும் அந்த கர்ம விதியைப் பின்பற்ற வேண்டும். அவர் தனித்து இயங்க முடியாது. மக்கள் அவரவர்கள் கர்மத்துக்குக் கட்டுப்பட்டிருக்கும்போது, இந்திரன் என்ன செய்ய முடியும்? உயிர்கள் தங்கள் கர்ம பலனை முறையாக அனுபவித்துக் கொண்டிருக்கும்போது இந்திரனுக்கு அங்கு என்ன வேலை? இயற்கையில் மனிதனுக்கு நிர்ணயித்திருப்பதையும் இறந்த காலச் செயல்களால் நமக்குப் புலப்படாமல் இயங்கிக் கொண்டிருக்கும் ஆற்றலை இந்திரனுல் மாற்ற முடியாது. ஸ்வபாவம் அல்லது கர்ம இயல்பு விதியால் தீர்மாணிக்கப்படுகிறது. இறந்த காலச் செயல்களின் விளைவாக ஏற்பட்ட நம் அறிவுக்குப் புலப்படாமல் மறைந்துள்ள சம்ஸ்காரங்களுக்கு மனிதன் கட்டுப்பட்டவன். அவன் தன் இயல்பைப் பின்பற்றி நடக்கிருன். தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள் ஆகியவர்களடங்கிய இந்தப் பிரபஞ்சம் முழுவதும் வாழ்வதும், இயங்குவதும் இயற்கையையொட்டித்தான். கர்மத்தின் விளைவாக ஒருவன் பல பிறவிகளை எடுத்து மடிகிருன். கர்மாதான் ஒருவரின் வழிகாட்டி. கர்மாதான் எல்லாருக்கும் மேலாக ஆளும் சக்தி. இந்திரன் என்ன செய்வான்? எனவே நம் பசுக்களுக்கும், பிராம்மணர்களுக்கும், மலைகளுக்கும், இறந்தவர்களுக்கும் பூஜை செய்து விழா எடுப்போம். நாய்களுக்கு வயிராற உணவு படைப்போம். பசுக்களுக்குப் போதுமான உணவு கொடுப்போம்'' என்று கண்ணன் தன் தந்தையிடம் சொன்னுன்.

நந்தகோபனும் மற்ற கோபாலர்களும் கண்ணன் சொன்னதை ஒத்துக்கொண்டார்கள். கண்ணன் சொன்னவாறே எல்லாவற்றையும் செய்தார்கள். பசுக்களுக்கும் அந்தணர்களுக்கும் கோவர்த்தன மலைக்கும் வழிபாடு செய்தார்கள். மலையைச் சுற்றி வந்தார்கள். ''நான்தான் மலை'' என்று கண்ணன் சொன்னான். கோபாலர்களின் நம்பிக்கையை உறுதி செய்வதற்காக, தான் மிகப்பெரிய உருவத்தை எடுத்துக்கொண்டு மலையின் உச்சியில் தோன்றினான். தானே அந்த மலைக்குரிய தெய்வம் என்று அவர்களிடம் கண்ணன் கூறினான். அதன் பின்னர் அந்த மலைக்குப் படைத்திருந்த பொங்கல் முதலியவற்றைத் தானே உண்ணத் தொடங்கினான்.

## கோவர்த்தன கிரியைத் தூக்குதல்

இந்திரன் நந்தகோபன் மீதும் மற்ற கோபாலர்கள் மீதும் பெருங்கோபம் கொண்டான். காற்றையும் மேகங்களையும் பிருந்தாவனத்துக்கு அனுப்பி, இடி, மின்னல், கல்மாரி ஆகியவற்றோடு கூடிய பெருமழை பெய்யச் செய்தான். கண்ணன் தன் கையால் கோவர்த்தன மலையைத் தூக்கிப் பிடித்தான். பிருந்தாவனத்திலுள்ள எல்லா மக்களும் பசுமாடுகளும் அந்த மலைக்குக் கீழே பாதுகாப்புடன் தங்கினார்கள் ஏழு நாட்கள் விடாது மழை பெய்தது. ஏழு நாட்களும் கண்ணன் சிறிதுகூட அசையாமல் மலையை தொடர்ந்து பிடித்துக்கொண்டே இருந்தான்.

இந்திரனுக்கு பெரும் வியப்பேற்பட்டது. அவன் கர்வம் அழிந்தது. மேகங்களையும் காற்றையும் திருப்பி அனுப்பினான். கோபாலர்கள் மாடு கன்றுகளுடன் தத்தம் இல்லங்களுக்குச் சென்றார்கள். கண்ணன் கோவர்த்தன மலையை அது முன்பிருந்த இடத்தில் வைத்து விட்டான்.

கோபாலர்கள் மிகவும் ஆச்சரியமடைந்து நந்த கோபனிடம் சென்று, ''இந்த ஏழுவயது சிறுவன் கோவர்த்தன மலையைத் தரையிலிருந்து எடுத்துத் தன் ஒரே கையால் ஏழு நாட்கள் தூக்கிப் பிடித்திருந்தான். இந்த விந்தையான செயலை எந்தச் சாதாரண மனிதனாலும் செய்ய முடியாது. உன் மகன் உண்மையில் பரம்பொருளான இறைவன் தான். அவன் பரமாத்மாதான்'' என்று கூறினார்கள்.

இந்திரனும் காமதேனு என்னும் தேவலோகப் பசுவும் விண்ணுலகிலிருந்து இறங்கிவந்தார்கள். இந்திரன் கண்ணனுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி கண்ணனைப் போற்றத் தொடங்கினான். ''அனைத்துலகங்களின் தந்தையும், ஆசிரியனும், மேலான இறைவனும் நீயே. உன் அடியவர்களின் விருப்பங்களை நிறைவேற்றும் பொருட்டு, உன் விருப்பப்படி உருவங்களை எடுத்துக் கொள்ளுகிறாய். என்னைப் போன்றவர்களின் அறியாமையையும், ஆட்சிப் பதவியினால் ஏற்பட்ட ஆணவத்தையும் உன்னருளாலும் தரிசனத்தாலும் போக்குகிறாய். அதன்பின் அவர்கள் பக்தி நெறியில் ஈடுபடுகிறார்கள். உன் ஒவ்வொரு செயலும் கொடியவர்களைத் தண்டித்து நன்னெறிப் படுத்தவே நடைபெறுகிறது. பணத்தாலும் பதவியாலும் ஏற்பட்ட ஆணவத்தின் மயக்கம் காரணமாக நான் உன்னை மதிக்கவில்லை. தூய அறிவும், பகுத்தறியும் தன்மையும், இல்லாதபடியால் உன் பெருமையை உணரவில்லை, இறைவா என்னை மன்னித்து எனக்குத் தூய அறிவைக் கொடு. கர்வத்திலிருந்து எனக்கு விடுதலை கொடு. உன்னை மீண்டும் மீண்டும் வணங்குகிறேன்''.

''இந்திரா! உன் விழாவில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தி உனக்கு ஓர் உதவி செய்தேன். உனக்குப்

பதவியாலும் அதிகாரத்தாலும் மிகவும் கர்வம் ஏற்பட்டிருந்தது. என்னை நீ மீண்டும் நினைக்க வேண்டும் என்றுதான் இதைச் செய்தேன். அதிகாரமும் பதவியும் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் மயக்கத்தை உண்டாக்குகின்றன. அவர்களுக்கு ஆணவமுண்டாகிறது. அதிகாரமும் பதவியும் அவர்கள் கண்ணை மூடிவிடுகிறது. நான் யாருக்காவது உதவி செய்ய விரும்பினுல், அவர்கள் அதிகாரத்தையும் பதவியையும் பிடுங்கி விடுகிறேன் இந்திரா! நீ தேவலோகத்துக்குத் திரும்பிச் சென்று உன் கடமைகளைச் சரிவர செய். ஆணவத்தை முற்றிலும் ஒழித்துவிடு. என் கட்டளைகளைப் பின்பற்றி நட. என் தோற்றத்தை இடைவிடாது நினைவில் கொள். மகிழ்ச்சியுடன் இருப்பாயாக!'' என்று கண்ணன் இந்திரனுக்கு அறிவுரை கூறி வாழ்த்தி அனுப்பினுன்.

## கோவிந்தப் பட்டாபிஷேகம்

இந்திரனுடன் வந்திருந்த சுரபி என்னும் காமதேனுவாகிய பசுக்களின் தெய்வீக அன்னை தன் குழந்தைகளாகிய பசுக்களுக்குக் கண்ணன் செய்த அரிய சேவைக்காகக் கண்ணனுக்கு நன்றி தெரிவித்து ''கண்ணு! மகா யோகியே! அனைவர் உள்ளங்களிலும் வாழ்பவனே! அச்சுதா! பிரபஞ்சத்தைக் காப்பவனே! நீயே பரம்பொருள். இந்தப் பிரபஞ்சமே உன் வடிவம்தான். நீதான் இந்த உலகத்தின் ஆதாரம். நாங்கள் உன்னிலேயே இறைவனைக் கண்டோம். பிராம்மணர்கள், தேவர்கள், பசுக்கள் ஆகியவர்களின் நலனைக்காக்கும் நீதான் எங்கள் இந்திரன். பிரம்மனின் ஆணைப்படி உன்னையே எங்கள் இந்திரனுக முடிசூட்டுகிறேன்'' என்று கூறியது.

கண்ணனிடம் இவ்வாறு கூறிய காமதேனு அவனுக்குத் தன் பாலால் அபிஷேகம் செய்தது. இந்திரனும் மற்ற தேவர்களும் தெய்வீக அன்னையரின் ஆணைப்படி ஐராவதம் என்னும் பட்டத்து யானையால் கொண்டுவரப்பட்ட ஆகாய கங்கை நீரால் கண்ணனை நீராட்டினார்கள். கண்ணனுக்கு அவர்கள் அனைவரும் ''கோவிந்தன்'' என்னும் பட்டத்தைச் சூட்டினார்கள் (''கோ'' என்றால் இந்திரன், பசுக்கள், சுவர்க்கம் என்றும் ''விந்த'' என்றால் அடைதல் என்றும் பொருள்படும்). முனிவர்களும், கந்தர்வர்களும், வித்யாதரர்களும், சித்தர்களும், சாரணர்களும் முடிசூட்டு விழாவில் கலந்துகொண்டனர். மூவுலகங்களிலும் மகிழ்ச்சி பொங்கியது. தரையெங்கும் பசுக்களின் பால் வெள்ளம் நிரம்பியது. ஆறுகளில் பால் வெள்ளம் பெருகிற்று. மரங்கள் இனியதேனைச் சொரிந்தன. மனிதர்கள் உழவு செய்யாமலே விளைநிலங்களில் ஏராளமான தானியங்கள் விளைந்தன. மலைகள் விலையுயர்ந்த நவரத்தினங்களைக் கொடுத்தன. கொடிய விலங்குகள்கூட அமைதியாக இருந்தன.

இவ்வாறு கண்ணனை பசுக்களுக்கும் கோகுலத்துக்கும் இறைவனாகவும் பாதுகாவலனாகவும் முடிசூட்டி, அவனுக்குக் ''கோவிந்தன்'' என்ற பட்டத்தையும் சூட்டிவிட்டு, அவனுடைய அனுமதி பெற்று, இந்திரன் மற்ற தேவர்களுடன் விண்ணுலகத்துக்குத் திரும்பிச் சென்றான்.

## நந்தகோபனை வருணனிடமிருந்து மீட்டல்

நந்தன் ஒருசமயம் ஏகாதசியன்று விரதமனுஷ்டித்து ஜனார்த்தனனை வழிபட்டான். மறுநாள் துவாதசியன்று யமுனை நதியில் நீராடச் சென்றான்.

அப்போது இருள் சூழ்ந்திருந்தது. நள்ளிரவில் ஆற்றில் இறங்கினுன். வருணனின் வேலையாளான ஓர் அசுரன் நந்தகோபனைக் கட்டிப்பிடித்துத் தன் தலைவன்முன் அழைத்துச் சென்ருன்.

கோபாலர்கள் நந்தனைக் காணுமல் பலராமனை யும் கண்ணனையும் கூவி அழைத்தார்கள். அவர்கள் கூக்குரலைக் கேட்ட கண்ணன், நந்தகோபன் வருண லோகத்திலிருந்ததை உணர்ந்துகொண்டான். உடனே ஆற்றில் குதித்து வருணலோகத்தை அடைந்தான்.

வருணன் கண்ணனை வணங்கிக் கீழ்க்கண்ட வாறு சொல்லத் தொடங்கினுன். ''என்னுடைய நோக்கம் நிறைவேறிவிட்டது. ஒன்றும் அறியாத வனும் முட்டாளுமாகிய என் வேலைக்காரன் தங்கள் தந்தையை இங்கு அழைத்துவந்துவிட்டான். அருள் கூர்ந்து என்னை மன்னியுங்கள். இதோ தங்கள் தந்தை. அவரைத் தாங்கள் அழைத்துச் செல்லுங் கள். தங்கள் தந்தை இங்கு அழைத்துவரப்பட்ட தால்தான் நான் தங்களைக் காணும் நல் வாய்ப்பைப் பெற்றேன்'' அதன்பின் கண்ணன் தன் தந்தையை அழைத்துச் சென்ருன்.

நந்தகோபன் கோபாலர்களிடம் தான் கண்ட தைத் தெரிவித்தான். கண்ணன் ஈசுவரனைத்தவிர வேறில்லை என்று அவர்கள் கருதினுர்கள்.

கண்ணன் தன்னுடைய நிரந்தரமான இடமாகிய வைகுந்தத்துக்குத் தங்களை அழைத்துச் செல்ல வேண்டுமென்று அவர்கள் மிகவும் ஆசைப் பட்டார்கள். எல்லாமறிந்த கண்ணன் இதைத் தெரிந்துகொண்டான். அவன் கோபாலர்களை யமுனையின் ஒருபகுதியாகிய ''பிரம்மாஹ்ருதம்''

என்னும் இடத்துக்கு அழைத்துச் சென்றான். அங்கே அவர்களை ஆற்றில் குதிக்கச் சொன்னான். அந்த இடத்தில் கோபாலர்கள் கண்ணனின் சிறப்புமிக்க இருப்பிடமாகிய வைகுந்த லோகத்தைக் கண்டார்கள். அது பிரக்ருதியின் எல்லைக்கு அப்பால் இருந்தது. அந்த காட்சியைப் பார்த்த அவர்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள். அங்கே அவர்கள் கண்ணனைக் கண்டார்கள். வேதங்களைப் பாடிக் கொண்டிருந்தவர்களின் நடுவில் கண்ணனைக் கண்டதும் அவர்கள் பெருமகிழ்ச்சியும், வியப்பும் அடைந்தார்கள்.

## ராச லீலையின் தொடக்கம்

ஒருசமயம் கண்ணன், கோபிகைகளிடம் பின்னால் வரும் இரவுகளில் தன்னோடு மகிழ்ந்திருக்கலாம் என்று கூறி இருந்தான்.

இலையுதிர்கால இரவுகளைக் கண்ட கண்ணபிரான் எவருக்கும் புலப்படாத யோகமாயையின் உதவியால் மகிழ்ச்சியுடன் இருந்து கோபியரின் வேட்கையையும் தணிக்க விரும்பினான். அடிவானத்தில் சந்திரன் உதயமானதும் தன் புல்லாங்குழலை எடுத்து கோபியரின் உள்ளத்தைக் கவர்ந்து அவர்கள் மனதை மயக்கும் வண்ணம் மதுரகீதம் வாசிக்கத் தொடங்கினான். தெய்வீக அன்பைத் தூண்டிவிட்டு இறைவனைச் சந்திக்க வேண்டுமென்ற ஆசையைப் பெருக்கும் அந்த மதுரகீதத்தைக் கேட்ட கோபியர்கள், கண்ணனால் கவரப்பட்ட உள்ளங்களுடன், அவனைச் சந்திப்பதை ஒருவருக்கொருவர் தெரியாமல், தங்கள் காதணிகள் முன்னும் பின்னும் ஊசலாடத் தங்கள் அன்புக்குரிய இறைவன் இருந்த இடத்தை நோக்கி விரைந்து சென்றார்கள்.

அவர்களுள் சிலர் பசுக்களிடம் பால் கறந்து கொண்டிருக்கையில் பாதியில் விட்டுச் சென்றார்கள். பால் பொங்குவதைக்கூடக் கவனிக்காமல் சிலர் சென்றனர். அடுப்பில் கொதித்துக் கொண்டிருந்த உணவை இறக்காமலே சிலர் சென்றனர். உணவு பரிமாறிக் கொண்டிருந்தவர்களும், குழந்தைகளுக்குப் பால் கொடுத்துக் கொண்டிருந்தவர்களும், கணவன்மாருக்குத் தொண்டு செய்துகொண்டிருந்தவர்களும், உணவு உண்டுகொண்டிருந்தவர்களும், நீராடிக்கொண்டிருந்தவர்களும், கண்ணுக்கு மையிட்டுக் கொண்டிருந்தவர்களும், பாதியிலேயே விட்டுவிட்டுக் கண்ணனிடம் ஓடினார்கள். அவசரத்தினால் தங்கள் ஆடை அணிகளைக்கூடச் சரிவர அணியாமல் கண்ணனிடம் ஓடிச் சென்றார்கள்.

கோபியரின் கணவன்மாரும், பெற்றோரும், சகோதரர்களும் மற்ற உறவினர்களும் அவர்களைத் தடுத்து நிறுத்த முயற்சி செய்தனர். ஆனால் அவர்கள் ஒருவித மயக்கத்துடன் போய்க்கொண்டிருந்தார்கள். கோவிந்தனின் குழலிசையில் அவர்கள் உள்ளங்கள் முற்றிலும் மயங்கியிருந்தன. அவர்கள் வீட்டுப் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

சில கோபியர்களை அவர்கள் உறவினர்களும் தோழர்களும் வீட்டில் அடைத்துவைத்தார்கள். அவர்களால் வெளியில் வரமுடியவில்லை. எனவே கண்களை மூடிக்கொண்டு கண்ணனைத் தியானம் செய்யத் தொடங்கினார்கள். அவர்கள் எண்ணமெல்லாம் முன்பே கண்ணனுக்கு அர்ப்பணிக்கப் பட்டுவிட்டன. இப்பொழுது தங்கள் மனதில் அவனை உறுதியாகப் பிடித்து வைத்துக்கொண்டார்கள். அவர்களுக்கு கண்ணனிடம் ஏற்பட்ட பிரிவாற்றாமை என்னும் தீயால் அவர்கள் பாவங்கள் எல்லாம் பொசுக்கப்பட்டன. தியானத்தினால் அவனைத்

தழுவிக்கொண்டதன் காரணமாக அவர்கள் நற் செயல்களின் பலன்கள் நீங்கின. செயலின்மீதிருந்த பற்று அவர்களை விட்டு அக்கணமே அடியோடு நீங்கியது. கண்ணனைத் தங்கள் காதலனாக எண்ணித் தங்கள் அன்புக்குரியவனாக அவனைப்பற்றித் தியானம் செய்த போதிலும், அவர்கள் குணங்களாலான தங்கள் உடல்களை நீத்து பரமாத்மா என்னும் உயர்ந்த நிலையை அடைந்தார்கள்.

எப்பொழுதும் மாறாதவனும், முடிவற்ற வனும், குணங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவனும், மூவகைக் குணங்களைக் கடந்தவனுமாகிய இறை வன், மக்களைக்காத்து அருள்பவனாக இருப்பதால், மக்களை வாழ்விப்பதற்காக உலகத்தில் தோன்று கிறான்.

ஆசை, கோபம், பயம், பாசம், நட்பு, மரியாதை ஆகியவற்றில் ஏதாவதொன்றின் காரண மாகவாவது ஹரியை இடைவிடாது தியானம் செய்துகொண்டிருப்பவன் அவனோடு ஒன்று படுகிறான். எனவே யோகீஸ்வரர்களின் தலைவனாகிய பிறப்பு இறப்பற்ற இறைவன் விஷயத்தில் இதில் வியப்பொன்றுமில்லை. மிகவும் இழிந்த பிறப்புடைய உயிரினங்கள்கூட அவனுடைய அருளால் விடுதலை அடையும்.

கோபியர்கள் அருகில் வந்தவுடன், கண்ணன் அவர்களிடம் பேசத் தொடங்கினான்.

''பெரும்பேறு பெற்றவர்களே! உங்களுக்கு நான் என்ன நன்மையைச் செய்யக்கூடும்? உங்கள் இருப்பிடமாகிய விரஜை பாதுகாப்பும் க்ஷேமமும் உடையதாக இருக்கின்றதா? நீங்கள் இங்கு வந்ததன் நோக்கம் என்ன? இந்த ஆபத்தான

இரவில் கொடிய மிருகங்கள் திரிந்துகொண்டிருக்கின்றன. உங்கள் இருப்பிடத்துக்குத் திரும்பிச் செல்லுங்கள். இது பெண்களுக்கேற்ற இடமல்ல. உங்கள் பெற்ரோரும் உடன் பிறந்தவர்களும், மக்களும், கணவன்மாரும் உங்களைத் தேடிக் கொண்டிருப்பார்கள். அவர்களுக்குக் கவலை உண்டாக்க வேண்டாம். இந்தக் காட்டின் அழகைப் பார்த்துவிட்டீர்கள். உங்கள் ஊராகிய விரஜைக்குத் திரும்பிச் சென்று உங்கள் கணவன்மார்களுக்கும், பசுக்களுக்கும், அழுதுகொண்டிருக்கும் உங்கள் குழந்தைகளுக்கும் தேவையான சேவை செய்யுங்கள். குழந்தைகளுக்குப் பாலூட்டுங்கள். பசுக்களிடமிருந்து பால் கறவுங்கள். என்னிடமுள்ள அன்பின் ஆற்றல் காரணமாக நீங்கள் இங்கு வந்திருந்தால் அது நியாயமானதே. ஏனென்றால் மக்கள் அனைவரும் என்னை நேசிக்கிறார்கள்.

கணவனிடத்தில் அன்பு செலுத்துவதே பெண்களுக்குரிய சிறந்த தெய்வநெறியாகும். தீவிரமான அன்புடன் கணவனுக்குத் தேவையான பணிவிடையைச் செய்வதே ஒரு பெண்ணின் மேலான கடமையாகும். தன் உறவினர்களின் நல்வாழ்வை நாடுவதும் தன் மக்களைப் பேணிவளர்ப்பதும் அவள் வேலையாகும். விண்ணுலக இன்பங்களை அடைய விரும்பும் பெண்கள், தங்கள் கணவன்மார், கொடியவர்களாகவும், வயதானவர்களாகவும், நோயுற்றவர்களாகவும், ஏழைகளாகவும் தீய நடத்தை உடையவர்களாகவும், இருந்தால்கூட அவர்களைப் புறக்கணிக்கக் கூடாது. உயர்ந்த குடும்பத்தில் பிறந்த ஒரு பெண் கள்ளக் காதலனை நாடிச் செல்வது இழிவானது. அதனால் இழிவும் துன்பமும் ஏற்பட்டு இறுதியில் விண்ணுலகம் பெறுவதற்கு இடையூறாகவும் இருக்கும். எனவே அதை முற்றிலும் வெறுத்து நீக்கவேண்டும். என் நற்பண்பு

களையும் நற்செய்கைகளைப் பற்றியும் கேட்பது, என் உருவத்தைக் காண்பது. அதை தியானம் செய்வது, என் புகழ்பாடுவது ஆகியவற்றில் ஈடுபட்டு, என்னிடம் அன்பு செலுத்துவது என் அருகிலேயே இருப்பதைவிடச் சிறந்தது. எனவே உங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் செல்லுங்கள்.''

''எல்லாம்வல்ல இறைவனே! இந்த இரக்கமற்ற வார்த்தை பேசுவது உனக்கு ஏற்றதல்ல. நாங்கள் எல்லாவற்றையும் துறந்துவிட்டு உன்னுடைய திருவடிகளையே சரணாக அடைந்துள்ளோம். எங்களை வெறுத்து ஒதுக்க வேண்டாம். நாராயணனாகிய இறைவன் தன் அடியவர்களை ஏற்றுக்கொள்வது போல், உன் அடியவர்களாகிய எங்களையும் ஏற்றுக் கொள். தர்மத்தின் இரகசியம் உனக்குத் தெரியாததல்ல. கணவன்மார், மக்கள், உறவினர், நண்பர்கள் ஆகியவர்களுக்கு அடங்கி நடந்துகொண்டு அவர்களுக்கு உதவுவதே பெண்களுக்குரிய இயல்பான கடமை என்று நீ கூறுவது முற்றிலும் உண்மையானதே. எங்கள் ஆன்மீக போதகரும், இறைவனுமாகிய உன்னைப் பின்பற்றி எங்கள் கணவன்மார், மற்றுமுள்ளோர் ஆகியவர்களுடைய விருப்பப்படி நடந்துகொள்கிறோம். இந்த ஆன்மீக அறிவுரைகளின்படி நாங்கள் நடந்து கொள்ளுகிறோம்.

நீதான் ஒப்பற்ற இறைவன். நீயே எங்கள் அன்புக்குரியவன், உறவினன், தலைவன், உயிர்கள் அனைவற்றின் ஆன்மா. நீதான் எங்கள் உண்மையான கணவன். சாஸ்திரங்களை நன்கு கற்றுணர்ந்தவர்கள் ''நீதான் அவர்களுடைய நிலைபெற்ற ஆன்மா'' என்று அறிந்து உன்னிடம் பேரின்பத்தைக் காண்கிறார்கள். உன்னிடம் மட்டுமே அவர்கள் அன்பு செலுத்துகிறார்கள். துன்பத்துக்குக் காரணமான கணவன்மார், மக்கள் இன்னும்

மற்றவர்களால் என்ன லாபம் அடைய முடியும்? எங்கள் நிலையான இன்பத்துக்கு அடிப்படை ஆதாரம் நீதான்.

எனவே எங்களிடம் கருணை காட்டி நாங்கள் உனக்குத் தொண்டு செய்வதற்கு அனுமதி அளிக்க வேண்டும். உன்னைப்பற்றி நாங்கள் நீண்டகால மாக வைத்திருக்கும் நம்பிக்கையை உதறித்தள்ளி விடாதே. உன் திருவடிகளிலிருந்து எங்களைத் துரத்திவிடாதே. இதுவரை எங்கள் வீடுகளிலேயே நிலைபெற்றிருந்த எங்கள் உள்ளங்களை, நீ கவர்ந்து விட்டாய். உன்னிடமிருந்து பிரிந்து ஓர் அடி கூட எங்களால் எடுத்துவைக்க முடியவில்லை. எனவே விரஜைக்கு எங்களால் எப்படித் திரும்பிச்செல்ல முடியும்? அங்கு சென்று என்ன செய்வது?

எங்கள் உள்ளத்தில் மூண்டுள்ள வேட்கைக் கனலை உன் உதடுகளிலிருந்து பெருகும் அமுத வெள்ளத்தாலும், இனிய புன்முறுவலாலும், அன்புப் பார்வையாலும், மயக்கும் இசையாலும் அணைத்துவிடு. இல்லாவிடில் பிரிவாற்றாமை என்னும் தீயால் எங்கள் உடலை எரித்துக்கொண்டு, தியானத்தின் மூலம் உன்னை அடையும் யோகிகளைப் போல உன்னை அடைந்து விடுவோம்.

செந்தாமரைக் கண்ணா! கானகத்தில் வாழ்பவர் களின் அன்புக்குரியவனே! திருமகளுக்கு மன மகிழ்ச்சியூட்டும் உன் திருவடிகளை நாங்கள் ஒரு முறை காட்டில் தொட்டோம். அவ்வாறு உன் ஆசிகளைப்பெற்ற எங்களால் வேறு ஒருவர்முன் ஒருகண நேரம்கூட நிற்கமுடியவில்லை. எனவே எங்கள் கணவன்மாருக்கும் மக்களுக்கும் எங்களால் எவ்வாறு தொண்டு செய்ய முடியும்?

மற்ற தேவதைகளெல்லாம் திருமகளின் அருளை வேண்டி அவளுடைய கடைக்கண் பார்வைக்காக கடும் தவம் இயற்றுகிறார்கள். திருமகள் உன் இதய கமலத்தில் ஒப்பற்ற இடத்தைப் பெற்றிருந்த போதிலும் உன் அன்பர்களாலும் தொண்டர் களாலும் போற்றி வணங்கப்படுகின்ற உன் தாமரைத் திருவடிகளிலுள்ள பாத தூளியை அடைவதற் காக அவைகளைத் துளசியால் அர்ச்சிக்கின்றாள். அம்மாதிரியே நாங்களும் உன் பாத தூளியின் பாதுகாப்பையே நாடி வந்துள்ளோம். துன்பங் களைத் துடைக்கும் இறைவா! எங்களிடம் கருணை காட்டு. நாங்கள் எங்கள் வீடுகளையும் சுற்றத்தாரை யும் துறந்து உனக்கு தொண்டு செய்வதற்கென்றே உன் பாத மலர்களை நாடி வந்திருக்கின்றோம். எனவே உன் வசீகரமான புன்னகையிலும் பார்வை யிலும் ஏற்பட்ட தீவிரமான அன்பெனும் கொழுந்து விட்டெரியும் நெருப்பால் வெந்துகொண்டிருக்கும் எங்களை உனக்குத் தொண்டு செய்வதற்கு அனுமதிப் பாயாக!

நெற்றியில் சுருண்டுவிழும் மயிர்கற்றைகளையும், ஒளிமிக்க காதணிகளால் பிரகாசமாக விளங்கும் கன்னங்களையும், அமுது சொரியும் உதடுகளையும், கவர்ச்சிமிகுந்த புன்னகையோடுகூடிய உன் பார்வை யையும், உன்னைச் சரணாக அடைந்தோரைக் காக்கும் உன் இரண்டு கரங்களையும், திருமகளுக்கு மகிழ்ச்சியூட்டும் உன் திருமார்பையும் கண்டு நாங் கள் உன்னைச் சரணாக அடைந்து உனக்கு அடிமை களாகி விட்டோம்.

அன்பிற்குரியவனே! உன்னுடைய இனிமை யான குழலிசையைக் கேட்டு மயங்கி, உன்னை வணங்கிப் போற்றாத பெண் ஒருத்தி இந்த மூவுலகங் களிலும் எங்கேனும் இருக்கின்றாளா? கண்டவரை

மயக்கும் பேரழகுமிக்க உன் உருவத்தைக்கண்டு மயங்காதவர் மூவுலகங்களிலும் எங்கேனும் உண்டா? உன் உருவத்தைக் காணும் பறவைகளும், பசுக்களும், மான்களும், மரங்களும்கூட பெருமகிழ்ச்சி அடைகின்றன. புருஷோத்தமனுகிய பகவான் நாராயணன் தேவலோகத்தைக் காப்பாற்றுவதற்காக அவதாரம் எடுத்ததைப் போன்று, விரஜா ராஜ்யத்தின் துன்பத்தையும் துயரத்தையும் துடைப்பதற்காக நீயும் பிறவி எடுத்திருக்கின்ருய் என்பது தெளிவாகத் தெரிகின்றது. துன்புற்றவரின் தோழனே! உன்னுடைய அடிமைகளின் துடிக்கும் இதயங்களின்மேலும், வலிக்கும் தலைகளின்மேலும் உன் செந்தாமரைக் கைகளை வைப்பாயாக.''

கோபியர்களின் பரிதாபமான வேண்டுகோளைக் கேட்ட யோகியர் தலைவனை கண்ணன் மனங் கனிந்து அவர்களிடம் இரக்கம் கொண்டான். தன்னுடைய ஆன்மாவிலேயே இன்புற்றிருப்பவனுகிய கண்ணன், புன்னகை புரிந்து அவர்கள் தன்னுடன் விளையாடுவதற்கு அனுமதித்தான்.

கோபியர்கள் கண்ணனைச் சுற்றி வட்ட வடிவில் நின்று கொண்டார்கள். கண்ணன் தன் ஆன்மாவிடம் நிலைத்திருந்தான். அவனுடைய அன்புகனிந்த பார்வையும் மயக்கும் புன்னகையும் கோபியர்களின் முகங்களைப் பிரகாசிக்கச் செய்தன. வானத்தில் சுடர் விடும் விண்மீன்களுக்கிடையேயுள்ள சந்திரனைப் போன்று கோபியருக்கு நடுவில் புகழ்பெற்ற அருஞ் செயல்களை ஆற்றிய கண்ணன் சுடரொளியுடன் விளங்கினன்.

சில சமயம் அவனே பாடினன். மற்ற நேரங் களில் கோபியர்கள் அவன் புகழைப் பாடினர்கள்.

வைஜயந்தி என்ற மாலையை அணிந்துகொண்டு நூற்றுக் கணக்கான கோபியர் கூட்டங்கள் தொடரவும் கண்ணன் கோபியர்களுடன் பிருந்தாவனம் முழுவதும் அலைந்து திரிந்து அதற்கு அழகூட்டினான்.

அதன் பின்னர் பொடியாக்கப்பட்ட கற்பூரத்தைப் போன்று தூய வெண்ணிறத்துடன் பிரகாசித்துக்கொண்டிருந்த குளிர்ந்த ஆற்றுமணலை வந்தடைந்தான். அல்லிமலர்களின் நறுமணத்துடன் யமுனை நதியிலிருந்து குளிர்ந்த காற்று மகிழ்ச்சியுடன் வீசிக்கொண்டிருந்தது. கண்ணன் கோபியருடன் விளையாட்டில் ஈடுபட்டான்.

தன் கைகளை நீட்டியும், கோபியரைத் தழுவியும், அவர்களுடைய கைகள், சுருண்டமுடி, தொடை, இடுப்பு, மார்பு ஆகியவற்றைத் தொட்டும், நகங்களால் கீறியும், சிரிப்பும் கேலியும் செய்தும், விஷமத்தனமான பார்வையையும் மயக்கும் புன்னகையும் காட்டியும் மற்றும் பல விளையாட்டுத்தனமாக செய்கைகளாலும், கோபியரின் உள்ளங்களில் தூய்மையான தெய்வீகக் காதலைத் தூண்டிவிட்டு மகிழ்ச்சியூட்டினான்.

பரம கருணாநிதியும் எல்லாம் வல்ல இறைவனுமாகிய கண்ணன் கோபியர்களோடு விளையாடி அவர்களைப் பெருமைப்படுத்தியதால் அவர்கள் மகிழ்ச்சியால் மிகவும் கர்வம் கொண்டார்கள். தாங்கள் உலகிலுள்ள பெண்கள் எல்லோரையும் விட உயர்ந்தவர்கள் என்று எண்ணினார்கள்.

அவர்களுடைய நல்வாய்ப்பாலும் கர்வத்தாலும் ஏற்பட்ட அகந்தையைக் கண்ட கேசவன், அவர்களுடைய அகந்தையை அடக்கி அவர்களுக்கு

நல்லாசி வழங்கும் பொருட்டு அந்த இடத்திலிருந்து திடீரென்று மறைந்துவிட்டான்.

## கோபியர்கள் பிரிவாற்ருமையுடன் கண்ணனைத் தேடுதல்

இதைப்பற்றி சுகர் சொல்கிருர் :

"கண்ணன் திடீரென்று மறைந்தவுடன், விரஜாங்கனைகளாகிய கோபியர் மிகுந்த மனச் சோர்வடைந்தார்கள். அவனைக் காணுமல் தலைவனை இழந்த பெண் யானைகளைப்போன்று மிகவும் மனம் வருந்தினுர்கள். அவர்கள் உள்ளங்கள் பிரிவாற்ருமை என்னும் நெருப்பால் தகிக்கப் பட்டன. கண்ணனுடைய சைகைகள், ஊடுருவும் பார்வைகள், விளையாட்டுகள், வேடிக்கைகள் கேலிப் பேச்சுகள் ஆகியவற்ருல் அவர்களுடைய உள்ளங்கள் மிகவும் கவரப்பட்டதால், அவனைப் போலவே பலவிதமாகப் பேசவும் நடிக்கவும் தொடங்கினுர்கள். தங்களைக் கண்ணனுகவே பாவித்துக்கொண்டு அவனைப்போன்றே நடிக்கத் தொடங்கினுர்கள்.

நடையிலும், சிரிப்பிலும், பார்வையிலும், பேச்சிலும், அசைவிலும் கண்ணனைப்போன்றே நடந்துகொண்டார்கள். அவர்கள் கண்ணனைப் போன்றே நடந்தார்கள், நின்ருர்கள், அழகாகச் செயல் பட்டார்கள். ஒவ்வொருவரும் மற்றவர் களிடம் "நான் கண்ணன்" என்று சொல்லிக் கொண்டு, கண்ணனிடம் முழுமையாக ஒன்றிப் போனுர்கள்.

அவர்கள் எல்லோரும் அவன் புகழை உரக்கப் பாடிக்கொண்டே கண்ணனைக் காடு முழுவதும்

தேடிக்கொண்டே சென்றார்கள். ஆகாய வெளியைப் போல் எல்லா உயிர்களின் உள்ளேயும், வெளி யுலகிலும் எங்கும் நிறைந்து விளங்கும் புருஷோத்த மனாகிய கண்ணன் எங்கிருக்கிறான் என்று மரங்களைக் கேட்டார்கள்.

''அரசமரமே! பலா மரமே! நந்தகுமாரனைக் கண்டீர்களா? அவன் தன் அன்பான பார்வை யாலும் புன்னகையாலும் எங்கள் உள்ளங்களைக் கவர்ந்து, எங்கோ சென்று மறைந்து விட்டான்'' என்று அவர்கள் சொன்னார்கள்.

''அசோக மரமே! நாவல் மரமே! புன்னாக மரமே! செண்பக மரமே! அகந்தை நிறைந்த பெண்களை அடக்கி, மனவருத்தமடைந்த பெண் களின் கோபத்தை விரட்டும் புன்னகைக்கு உரிய வனான பலராமனின் இளவலாகிய கண்ணன் இந்த வழியே சென்றானா?''

''கோவிந்தனின் திருவடிகளோடு ஒட்டி உறவாடும் பேறு பெற்ற துளசியே; வண்டுகள் மொய்க்கும் உன்னை எப்பொழுதும் மாலையாக அணிந்துள்ள உன் அன்பிற்குரியவனான அச்சுதனைக் கண்டாயா?''

''மாலதி, மல்லிகை, ஜாதி, ஜூதிகை மலர் களே! தன் கையால் தொடுவதன்மூலம் உங்களுக்கு மகிழ்ச்சியூட்டிய கண்ணனைப் பார்த்தீர்களா?''

''மாமரமே! பலா மரமே! அசோக மரமே! வில்வ மரமே! நெல்லி மரமே! நாவல் மரமே! வேப்ப மரமே! மற்ற மரங்களே! மற்றவர்களுடைய நன்மைக்காக யமுனை நதிக்கரையில் வாழும் மரங் களே! கண்ணன் எங்கே இருக்கிறான்? அவன் எந்த

வழியாகச் சென்றான்? அருள்கூர்ந்து எங்களுக்குச் சொல்லுங்கள்.''

''அன்னை பூமியே! கேசவனுடைய தாள்கள் உன்மீது படுவதால் ஏற்படும் பெருமகிழ்ச்சியடைந்து உன் மயிர்க்கால்கள் குத்திட்டு நிற்பதற்கு எத்தகைய அரும் தவத்தை நீ செய்திருக்க வேண்டும்! இந்த மகிழ்ச்சி இப்போது கண்ணபிரானுடைய திருவடிகள் உன்மீது பட்டதால் ஏற்பட்டதா அல்லது திருவிக்ரம அவதாரத்திலே இறைவன் அடியெடுத்து வைத்தபோது ஏற்பட்டதா அல்லது வராக அவதாரத்திலே இறைவன் உன்னைத் தழுவிக் கொண்ட காரணத்தால் ஏற்பட்டதா?''

''மான்களே! அச்சுதன் தன் அருமைத் தோழியோடும் அழகான முகம், கைகள் ஆகியவற்றால் உன் கண்களுக்கு விருந்தளித்துக்கொண்டே இவ்வழியே சென்றானா? ஆம், இவ்வழியேதான் சென்றிருக்கவேண்டும். ஏனெனில் இங்கேதான் அவன் பிரியமான தோழி பூசிக்கொண்டிருந்த வாசனைக் குழம்பின் நறுமணம் தோய்ந்த கண்ணனுடைய குந்த மலர்களாலான மாலையின் நறுமணம் வீசிக் கொண்டிருக்கின்றது.''

''மரங்களே! பலராமனுடைய சகோதரன் தன் ஒரு கையை தன்னுடைய தோழியின் தோள் மீது வைத்துக்கொண்டும், மற்ற கையில் தாமரை மலர்களைப் பிடித்துக்கொண்டும், துளசியின் நறுமணத்தில் மயங்கியிருந்த தேனீக்கள் பின் தொடர இவ்வழியே சென்றானா?''

''தோழிகளே! தங்கள் மரக்கிளைகளாகிய அன்பர்களைச் சுற்றித் தழுவிக்கொண்டிருக்கும் இந்தக் கொடிகளைக் கேட்கலாம். அவன் தன் விரல்களால் அவற்றைத் தொட்டிருக்கவேண்டும்.

அதனுல்தான் அவைகள் மகிழ்ச்சியால் துடித்துக் கொண்டிருக்கின்றன.''

இவ்வாறு சொல்லிக்கொண்டே, அவர்கள் இங்குமங்கும் ஓடினுர்கள். கண்ணனைத் தேடிக் களைத்துப் போனுர்கள். அதனுல் அவர்களுடைய தெய்வீக அன்பு அதிகமாயிற்றே தவிர, குறைய வில்லை. அவர்கள் கண்ணனேடு ஒன்றுபட்ட நிலையை அடைந்து, அவனுடைய வெவ்வேறு விளையாட்டு களை நடிக்கத் தொடங்கினுர்கள். ஒருத்தி பூதனை யாக நடித்தாள். மற்ெருரு கோபிகை கண்ணனுக நடித்து முன்னவளின் மார்பில் பாலருந்தத் தொடங் கினுள். ஒரு கோபிகை வண்டியாகவும், இன்ெனுரு கோபிகை அதை உதைத்து உடைக்கும் கண்ணனுக வும் நடித்தார்கள்.

ஒரு பெண் தைத்யன், திரிணுவர்த்தன் ஆகிய இரு அசுரர்களைப்போல நடித்து குழந்தைக் கண்ணனுக நடித்த வேெறுருத்தியைத் தூக்கிக்கொண்டாள். மற்ெறுரு கோபிகை குழந்தைக் கண்ணன் கால்களில் சலங்கைகள் சத்தமிட முழங்கால்களில் தவழ்வதைப் போன்று தவழத் தொடங்கினுள். ஒரு கோபிகை கண்ணனுகவும் மற்ெறுருத்தி பலராமனுகவும் நடித் தார்கள். மற்றும் பலர் மாடுமேய்க்கும் சிறுவர் களானுர்கள். ஒருத்தி வத்சாசுரனுகவும் வேெறுருத்தி பகாசுரனுகவும் ஆனுர்கள். ஒருத்தி வத்சாசுரனுக நடித்தவளையும், வேெறுருத்தி பகாசுரனுக நடித்த வளையும் அடித்து வீழ்த்தினுர்கள்.

ஒரு கோபிகை கண்ணனைப்போன்று தூரத்தில் மேய்ந்துகொண்டிருந்த பசுக்கள் ஒவ்வொன்றையும் அவற்றின் பெயரைச் சொல்லி அழைத்ததோடு, புல்லாங்குழல் ஊதுவதைப்போல் நடித்தாள். மற்ற கோபிகைகள் அவளுடைய நடிப்பைப் பாராட்டிக் கூச்சலிட்டார்கள்.

கண்ணனைப்பற்றிய நினைப்பிலேயே மூழ்கியிருந்த ஒருத்தி மற்றொரு கோபிகையின் தோளின்மேல் கையைப் போட்டுக்கொண்டு நடந்துகொண்டே ''என்னுடைய நடை எப்படி இருக்கின்றது? நான் தான் கண்ணன்'' என்று சொன்னாள். ''விரஜா நாட்டு மக்களே! இந்த மழையையும் புயலையும் கண்டு பயப்பட வேண்டாம். உங்களுக்கு நான் பாதுகாப்பளிக்கிறேன்,'' என்று சொல்லிக் கொண்டே தன்னுடைய மேலாடையை ஒரு கையில் தூக்கிப் பிடித்துக்கொண்டு கோவர்த்தன கிரியை தூக்கிப்பிடிப்பதுபோல் நடித்தாள்.

''கோபாலர்களே! இந்த பயங்கரமான காட்டுத் தீயைப் பாருங்கள். உங்கள் கண்களை மூடிக்கொள்ளுங்கள். நான் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறேன்,'' என்று ஒரு கோபிகை சொன்னாள்.

ஒரு கோபிகை மற்றொருவளின் தோள்மீது ஏறி நின்று அவள் தலைமேல் தன் காலை வைத்துக்கொண்டு, ''ஏ கொடிய பாம்பே! இங்கிருந்து ஓடிப்போய்விடு. கொடியவர்களைத் தண்டிப்பதற்கென்றே நான் பிறந்திருக்கிறேன் என்று உனக்குத் தெரியாதா''? என்று சொன்னாள்.

ஒரு கோபிகை தன்னை யசோதையாக பாவித்துக்கொண்டு, கண்ணனாக நடித்த மற்றொரு கோபிகையை, உரலாக நடித்த மூன்றாவது கோபிகையோடு சேர்த்துக் கட்டிவிட்டு ''என் வீட்டில் பானையை உடைத்து வெண்ணெயைத் திருடிய கள்வன் இங்கே இருக்கிறான்'' என்று சொன்னாள். கண்ணனாக நடித்த கோபிகை தன் கைகளால் முகத்தை மூடிக்கொண்டு பயத்தினால் நடுங்குபவளைப்போல் நடித்தாள்.

இவ்வாறு பிருந்தாவனத்திலிருந்த மரங்களையும் கொடிகளையும் கண்ணன் எங்கிருக்கிறான் என்று வினவிய பிறகு, அந்த வனத்தில் ஓரிடத்தில் கண்ணனுடைய அடிச்சுவடுகளைப் பார்த்தார்கள். ''இவை மேன்மைபொருந்திய நந்தகுமாரனுடைய அடிச்சுவடுகளாகத்தான் இருக்கவேண்டும். ஏனென்றால் அவற்றில், கொடி, சங்கு, சக்கரம், கதை, தாமரை, இடி, அங்குசம் ஆகிய அடையாளங்கள் காணப்படுகின்றன'' என்று சொன்னார்கள். இன்னும் சிறிது தூரம் அந்த அடையாளங்களைத் தொடர்ந்து சென்றபோது, அந்த அடையாளங்கள் ஒரு பெண்ணின் காலடிச் சுவடுகளோடு கலந்திருப்பதைக் கண்டார்கள். அதைக் கண்டதும் மிகவும் மனத்துயரமடைந்தார்கள்.

கோபிகைகள் கீழ்க்கண்டவாறு சொல்லத் தொடங்கினார்கள்: இவைகள் யாருடைய காலடிச் சுவடுகளாக இருக்கும்? ஒரு பெண்யானை யானைக் கூட்டத்தின் தலைவனாகிய தன் காதலனுடன் செல்வதைப்போல், நந்தகுமாரனுடைய தோள் மேல் கையை வைத்துக்கொண்டு சென்ற இந்தப் பெண் யாராக இருக்கலாம்? உண்மையில் அந்தப் பெண் எல்லாம் வல்ல இறைவனாகிய கண்ணனை மிகவும் சிரத்தையுடன் போற்றி வழிபட்டிருக்கிறாள். அந்தக் காரணத்தினால்தான் கண்ணன் நம் எல்லோரையும் விட்டுவிட்டு அவளை மட்டும் தனியே அழைத்துக்கொண்டு சென்றிருக்கிறான். தோழிகளே! கண்ணனுடைய செந்தாமரை மலரையொத்த பாததூளி மிகவும் சிறந்தது, புனிதமானது. பிரம்மா, ருத்ரன், திருமகள் ஆகியோர் தங்கள் பாவங்களைப் போக்கிக்கொள்வதற்காக அவனுடைய பாததூளிகளைத் தங்கள் தலையில் சூடுகிறார்கள்.

இந்தப் பெண்ணின் அடிச்சுவடுகள் நமக்கு மனத் துயரத்தைக் கொடுக்கின்றன. ஏனெனில் இவள் அச்சுதனைத் தனியே அழைத்துச் சென்று, அவன் இதழமுதத்தைத் தனியே அனுபவித்துக் கொண்டு இருக்கிறாள்.

இங்கே அவளுடைய அடிச்சுவடுகள் காணப் படவில்லை. இங்கேயுள்ள புற்களும் முட்களும் அவளுடைய மெதுவான பாதங்களைக் குத்தியதால் இறைவன் அவளைத் தன் தோள்மீது தூக்கிக் கொண்டு சென்றார்போல் காணப்படுகிறது. அந்தப் பெண்ணைத் தூக்கிக்கொண்டு நடந்ததால், கண்ணனுடைய திருவடிகள் இங்கு ஆழமாகப் பதிந்துள்ளன. காதலால் தவித்த கண்ணன் பளு வைத் தூக்கிக்கொண்டு நடந்ததால், அவன் திருவடி கள் எவ்வளவு ஆழமாகப் பதிந்துள்ளன பாருங்கள்! இங்கே அந்தப் பெண்ணைத் தூக்கிக் கொண்டிருக்க வேண்டும். இங்கே அந்தப் பெண்ணைக் கீழேவைத்து விட்டு பூக்களைப் பறிப்பதற்காகத் தன் முன்னங்கால் விரல்களால் நின்றிருக்கவேண்டும். அவனுடைய திருவடிகள் முழுவதும் நிலத்தில் பதியவில்லை. உண்மையில் இங்கே தரையில் அமர்ந்து அவளுடைய தலையை வாரி அந்தப் பூக்களை அவள் முடியில் சூட்டியிருக்கவேண்டும்.

கண்ணபிரான் எப்பொழுதும் ஆன்மாவிலேயே இலயித்திருப்பவன். அவன் முழு முதற்கடவுள். அவன் பரிபூரணமான ஒருவன். மலங்கள் அல்லது அழுக்குகள், ஆசைகள், வேட்கைகள் ஆகிய வற்றினின்றும் விடுபட்டவன். அவன் மாயையின் தலைவன், மாயையால் அவனை ஒன்றும் செய்ய முடியாது. அவன் இருவேறுபட்ட நிலைகளை அனுபவிப்பதில்லை. எப்பொழுதும் ஒரே நிலையை யுடையவனாக இருக்கிறான். இந்த விரஜா நகரின்

பெண்களுடைய மயக்கத்தால் அவன் கவரப்படவில்லை. அப்படியிருக்க சாதாரண மக்களின் காம விகாரங்களுக்கு அவனை எப்படி ஆளாக்க முடியும்? எனினும் தூயவனான முழு முதற் கடவுள் அந்தப் பெண்ணோடு ஏன் விளையாடினான்? காமத்தின் வயப்பட்டவனுடைய வருந்தத்தக்க மோசமான நிலையை உலகுக்கு எடுத்துக் காட்டவே அந்த விளையாட்டில் ஈடுபட்டான்.

இவ்வாறு பெண்களின் இயல்புக்கேற்றபடி, கோபியர்கள் கண்ணனுடைய அடிச்சுவடுகளை ஒருவருக்கொருவர் காட்டியபடியே காடு முழுவதும் அலைந்து திரிந்தார்கள்.

மற்ற கோபியர்களைவிட்டு அவளை மட்டும் கண்ணன் காட்டிற்குள் தனியே அழைத்துச் சென்றதால், அவள் தானே பெண்கள் எல்லாரிலும் சிறந்தவள் என்று கருதினாள். ''தன்னை நேசித்த கோபியர்கள் எல்லோருள்ளும் என்னைத்தான் இறைவன் விரும்புகிறான்,'' என்று எண்ணினாள்.

அவள் பெருமையுடன் பெருமகிழ்ச்சி அடைந்து காட்டின் நடுவில் கண்ணனிடம், ''அன்பனே! என்னால் இனி நடக்க முடியாது. எனவே நீ விரும்புகிற இடத்துக்கு என்னைத் தூக்கிக் கொண்டு செல்,'' என்று சொன்னாள்.

''அப்படியானால் என் தோள்மீது ஏறிக் கொள்,'' என்று கண்ணன் சொன்னான். அவள் கண்ணனுடைய தோளின்மீது ஏற முயன்றபோது, கண்ணன் திடீரென்று மறைந்துவிட்டான். அந்தப் பெண் பலமாகப் புலம்பத் தொடங்கினாள்! ''இறைவனே! அன்பா! எனக்கு மிகவும் பிரியமானவனே! எங்கே இருக்கின்றாய்? நீண்ட

கைகளை உடையவனே! எங்கே சென்றாய்? நண்பா! எனக்குமுன்னே தோன்றி அருள் புரிவாய். நான் உன்னுடைய ஆதரவற்ற அடிமை.''

பரமாத்மாவினுடைய அடிச்சுவடுகளைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த மற்ற கோபியர்கள், இறைவனால் கைவிடப்பட்டு, திகைத்துப் புலம்பிக்கொண்டிருந்த அந்தப் பெண்ணை தூரத்திலிருந்து பார்த்தார்கள். அவர்கள் அந்தப் பெண்ணை அணுகி அவள் எவ்வாறு கண்ணனுடைய தனிப்பட்ட அன்பைப் பெற்று இன்பத்தை அடைந்தாள் என்றும், பின்னர் அவள் எவ்வாறு தன்னுடைய தவறால் அந்த இன்பத்தை இழந்தாள் என்பதையும் கேட்டு அறிந்தார்கள். அதைக் கேட்டவுடன் கோபியர் மிகவும் வியப்படைந்தார்கள்.

அதன்பின் அவர்கள் அனைவரும் நிலவொளி வீசிக்கொண்டிருக்கும் வரையில் காட்டில் கண்ணனைத் தேடிக்கொண்டிருந்தார்கள். இருள் கவிந்ததும் தேடுவதை நிறுத்திவிட்டார்கள்.

அவர்களுடைய உள்ளங்கள் கண்ணனைப்பற்றிய எண்ணங்களிலேயே ஈடுபட்டிருந்தன. அவனைப் பற்றியே பேசினார்கள். அவனிடத்திலேயே முற்றிலும் ஈடுபட்டிருந்தார்கள். அவனுடைய மேலான பண்புகளைப் பற்றியே பாடினார்கள். தங்கள் இல்லங்களைப் பற்றிய எண்ணம் அவர்களுக்கில்லை. இவ்வாறு கண்ணபிரானைப் பற்றிய தியானத்திலேயே மூழ்கி, யமுனா நதிக் கரையிலுள்ள மணற்படுகைக்குத் திரும்பி வந்து, கண்ணன் திரும்பிவர வேண்டும் என்ற வேட்கையுடன் அவனுடைய பண்புகளைப் பற்றிக் கூட்டமாக ஒன்று சேர்ந்து பாடத் தொடங்கினார்கள்.

## கோபிகா கீதம்
## (கோபிகையின் பாட்டு)

கண்ணனுடைய பிரிவாற்ருமையினுல் பெருந் துயரடைந்த கோபிகைகள் கீழ்க்கண்டவாறு பாடத் தொடங்கினுர்கள்.

விரஜா ராச்சியம் நீ பிறந்ததால் பெரும் பேற்றைப் பெற்றது. அதனுல்தான் திருமகள் நிரந்தரமாக இங்கே வாசம் செய்யத் தொடங்கிவிட்டாள். நாங்கள் எல்லோரும் உன் அடிமைகள். உன்னைத் தேடிக் காட்டில் இங்குமங்கும் அலைகிறேம். உனக்காகவே வாழும் எங்களுக்கு முன்னுல் வெளிப்படு. காட்டில் எல்லாத் திசைகளிலும், உன்னைத் தேடி அலைந்து திரிந்து கொண்டிருக்கிறேம்.

இறைவா! மிக மேலான இன்பத்தை அளிப்பவனே! வரங்களை வாரி வழங்குபவனே! நாங்கள் உன் அடியவர்கள். இலையுதிர் காலத்தில் ஏரியில் மலர்ந்துள்ள தாமரை மலரின் எழிலைத் தோற்கச் செய்யும் உன் கண்களாகிய அம்புகளால் எங்கள் இதயத்தைத் துளைத்த பிறகு, எங்களை ஏமாற்றுவது எங்களை உண்மையில் உயிருடன் கொல்வதைப் போன்றல்லவா இருக்கின்றது.

புருஷோத்தமனே! யமுனை நதியின் விஷம் கலந்த நீரினின்றும், பெரிய மலைப்பாம்பின் வடிவத்துடன் வந்த ‘ஆ ஹ ா’ என்ற அரக்கர்களிடமிருந்தும், மழை, காற்று, இடி, மின்னல், கொடிய காட்டுத்தீ ஆகியவைகளிலிருந்தும், அரிஷ்டன், வியமோசுரன் ஆகிய அரக்கர்களிடமிருந்தும், மற்றும் அஞ்சத்தக்க பலவகையான ஆபத்துக்களினின்றும் எங்களைப் பலமுறை காப்பாற்றி இருக்கின்ருய்,

நீ யசோதையின் புதல்வன். உயிர்களின் உடல் களுக்குள்ளே இருக்கின்ற சாட்சியும் நீயே! பிரம்ம தேவனின் வேண்டுகோளுக்கு இணங்க இந்தப் பிரபஞ்சத்தைக் காத்து ரட்சிப்பதற்காக சத்வதஸ் வம்சத்திலே தோன்றியிருக்கின்றாய்.

அன்பனே! விருஷ்ணிகளின் முதல்வனே! அனைவருக்கும் எல்லா வரங்களையும் அளிக்கவல்ல தும், திருமகளைத் தாங்கி உள்ளதும், பயங்கரமான சம்சாரத்துக்கு அஞ்சி உன் திருவடிகளைச் சரணாக அடையும் அடியவர்களுக்கு அபயமளிப்பதுமாகிய கருணை நிரம்பிய உன் செந்தாமரைக் கையை எங்கள் தலைகளின்மேல் வைப்பாயாக!

விரஜா நாட்டு மக்களின் அல்லலைப் போக்கு பவனே! மாவீரனே! புன்னகையால் அடியவர்களின் கர்வத்தை அடக்குபவனே! நாங்கள் உன் தொண்டர் கள். எங்களை ஏற்றுக்கொண்டு, செந்தாமரை மலர்போன்ற உன்னுடைய அழகிய முகத்தை எங்களுக்குக் காட்டு.

உன் திருவடிகளில் வீழ்ந்து சரணடைபவர்களின் பாவங்களைப் போக்குவதும், புல்பூண்டுகளைத் தின்று உயிர்வாழும் மிருகங்களுக்குக்கூடக் கருணை காட்டு வதும், திருமகளால் எப்பொழுதும் இடைவிடாது பூஜிக்கப்பட்டுக்கொண்டிருப்பதும், செழிப்பை உண்டாக்கும் பொக்கிஷமாகியதும், காளியன் தலையில் நடனமாடியதுமாகிய செந்தாமரை மலர் போன்ற உன் திருவடிகளை எங்கள் மார்பின்மீது வை. எங்கள் மார்பின்மீது உன் மலரடிகளை வைப்ப தால், எங்கள் உள்ளத்திலுள்ள துன்பத்தையும், துயரக்கனலையும் போக்கிவிடு.

செந்தாமரைக் கண்ணு! கருணை மறவா! உன்னை அடைய வேண்டி உன் மயக்கத்தில் ஆழ்ந்திருக்கும் எங்களுக்கு ஞானிகளுக்குக்கூட மகிழ்ச்சியளிக்கும் உன் அழகான பேச்சாலும், உன் கண்கள் வழங்கும் அமுதமாகிய மருந்தாலும் ஆறுதல் அளிப்பாயாக!

உன் வரலாற்று நிகழ்ச்சிகள் துன்புற்றவர் களுக்கு வாழ்வளிக்கும் அமுதமாகும். அவை ஞானி களாலும் அரியவர்களாலும் போற்றிப் புகழப்படு கின்றன. இனியதும் புனிதமானதுமானது உன் வாழ்க்கை வரலாறு. அதைக் கேட்டவுடனேயே பாவங்கள் அனைத்தையும் போக்கி எல்லா வகை யான நன்மைகளையும் கொடுக்கின்றன. ஒவ்வொரு உள்ளத்துக்கும் ஆறுதல் அளிக்கின்றன. அதைப் பாடுகின்றவர்களும், கொண்டாடுபவர்களும் உலகத் திலேயே மிகச்சிறந்த அறச்செயலைச் செய்கின்றார் கள்.

கள்ளத்தனமுடையவனே! இனியவனே! எண்ணும்போதே மிகவும் மகிழ்ச்சியைக் கொடுக்கும் உன் புன்னகையும், உன் சிரிப்பும், அன்பான பார்வையும், மனதைக் கவரும் விளையாட்டும், கொடுக்கும் காதல் வாக்குறுதிகளும் எங்கள் இதயங் களிலே ஆழமாகப் பதிந்து, எங்கள் உள்ளங்களில் கிளர்ச்சியை உண்டாக்கி இருக்கின்றன.

இறைவா! உன் திருவடிகள் செந்தாமரை மலரைப் போன்று மெல்லியதாக இருக்கின்றன. மாடுகளை மேய்ப்பதற்காக விரஜா நகரத்திலிருந்து நீ வெளியே செல்லும்போது, கடினமான கற்களும், கூரான புற்களும், முட்களும் அவைகளை வருத்துமே என்று எண்ணும்போது எங்கள் உள்ளங்களில் வருத்தமேற்படுகின்றது.

வீரனே ! மாலையில் உன் முகம், தாமரை மலர் போன்றும் கறுத்துச் சுருண்டு தொங்கும் தலைமுடியால் மறைக்கப்பட்டும், பசுக்களின் குளம்படிகளிலிருந்து புறப்பட்ட தூசு படிந்தும் காணப்படுகின்றது. அப்பொழுது உன் அன்புகனிந்த பார்வை எங்கள் உள்ளங்களில் காதற்கனலைத் தூண்டிவிட்டு உன்னை சந்திக்கவேண்டும் என்ற ஆவலை உண்டாக்குகிறது.

மகிழ்ச்சியைக் கொடுப்பவனே ! மக்களின் துன்பத்தைப் போக்கும் இறைவா ! உன் திருவ்டிகளில் வீழ்ந்து வணங்குபவர்களின் விருப்பங்களை நிறைவேற்றுபவையும், தாமரை மலரில் வாழும் பிரம்ம தேவனால் வணங்கப்படுபவையும், தாங்கள் நிற்கும் நிலத்தின் அழகை அதிகப்படுத்துபவையும், துன்பமும் அச்சமும் நேரும்போது தியானிக்கப்பட வேண்டியவையும், தொண்டு செய்பவர்களுக்கு அமைதியை அளிப்பவையுமாகிய உன் தாமரைத் திருவடிகளை எங்கள் மார்பின்மேல் வைத்தருள்வாய்.

வீரனே ! எங்கள் உள்ளங்களில் வேட்கையைத் தூண்டுவதும், எல்லா வகையான துயரத்தையும் போக்குவதும், உன் குரலால் நிறைந்த புல்லாங்குழலால் முழுவதுமாக அனுபவிக்கப்படுவதும், எங்களுடைய மற்றெல்லாவிதமான பற்றுக்களையும் மறக்கச் செய்வதும், மனதிலுள்ள எல்லா வகையான கீழ்த்தரமான ஆசைகளையும், காமத்தையும் அழித்துவிடுவதுமான உன் இதழமுதத்தை நாங்கள் பருகுவதற்கு அனுமதிப்பாயாக.

பகற் காலத்தில் நீ காட்டிற்குச் சென்றிருக்கும் போது உன்னைக் காணாத ஒவ்வொரு கணமும்

எங்களுக்கு ஒவ்வொரு யுகத்தைப்போலத் தோன்று கிறது. சுருண்ட மயிற்கற்றைகளோடுகூடிய உன் திருமுகத்தைக் காணும்போது, அடிக்கடி மூடித் திறப்பதால் எங்கள் பார்வையை மறைக்கும் கண்ணிமைகளைப் படைத்த மந்த புத்தியுள்ள பிரம்ம தேவனைச் சபிக்கத் தொடங்குகிறோம்.

அச்சுதா! எங்கள் கணவன்மாரைத் துறந்து விட்டோம். மக்களையும், சுற்றத்தினரையும், நண்பர்களையும்கூடத் துறந்துவிட்டு உன்னை நாடி வந்திருக்கின்றோம். நாங்கள் உன்னை நாடி வந்திருக் கும் காரணத்தை நீ அறிவாய். உன்னுடைய தெய்வீகமான குழலின் இன்னிசையில் நாங்கள் மயங்கி விட்டோம்.

ஏமாற்றுக்காரனே! உன்னை நம்பிய பெண்களை, உன்னைத் தவிர வேறு எவரும் ஏமாற்ற மாட்டார் கள். அன்பனே! உன்னுடைய இனிமையான புன்னகை நிறைந்த முகத்தையும், அன்பான பார்வையையும், திருமகளின் இருப்பிடமாகிய உன் அகன்ற மார்பையும் எண்ணும்போது வேட்கை யால் எரிக்கப்பட்டு எங்கள் உள்ளங்கள் மயங்கி விட்டன.

அன்பனே! விரஜா நகரில் வாழும் மக்களின் துன்பத்தைப் போக்கவும், இந்தப் பிரபஞ்சத்துக்கு நல்வாழ்வளிக்கவுமே நீ பிறவி எடுத்தாய். எங்கள் உள்ளங்கள் உன்னை நினைந்து ஏங்குகின்றன. இறைவா! இரக்கமின்றி இருக்காதே. உன்னையே போற்றும் எங்களுக்கு எங்கள் உள்ளத்திலுள்ள துன்பம் அனைத்தையும் உறுதியாக அழிக்கவல்ல மருந்தில் சிறிதளவாவது கொடு.

அன்புக்குரியவனே! உன்னுடைய மெதுவான திருவடிகளை எங்கள் கடினமான மார்பில் நோகாமல்

மெதுவாக வைத்துக்கொள்கிறோம். ஆனால் நீயோ இந்த பயங்கரமான காட்டில் உன்னுடைய அழகிய தாமரை மலர்போன்ற மெதுவான திருவடிகளால் நடந்து செல்கிறாய். இறைவா! எங்கள் வாழ்க்கை முழுவதும் உன்னையே மையமாகக்கொண்டு அமைந்துள்ளது. நீதான் எங்கள் வாழ்க்கை. உன் கால்களில் பருக்கைக் கற்கள் குத்தித் துன்புறுத்தவில்லையா? இந்தக் காட்டிலுள்ள நிலப்பரப்பின் மீது சிதறிக் கிடக்கும் கடினமான பருக்கைக் கற்கள் உன் திருவடியைக் குத்தித் துன்புறுத்தும் என்று எண்ணும்போது எங்கள் மனத்தில் நடுக்க மேற்படுகிறது.

## கண்ணன் திடீரெனத் தோன்றி கோபிகைகளைத் தேற்றுதல்

இவ்வாறு கோபியர் பலத்த குரலில் கண்ணனுடைய புகழைப் பாடத் தொடங்கினார்கள். தங்கள் அன்புக்குரிய கண்ணனைப் பார்க்க விரும்பினார்கள். கதறி அழுதுகொண்டே தங்கள் புலம்பலை இசைவடிவில் பாடத் தொடங்கினார்கள். அதன் பின்னர் கண்ணன் மஞ்சள் நிற உடையையும், காட்டு மலர்களையும் அணிந்து, காதற் கடவுளின் உள்ளத்தையே கவரும் புன்சிரிப்பும் தாமரை மலரையொத்த அழகும் நிறைந்த முகத்துடன் அவர்கள் முன்னே தோன்றினான்.

உயிரற்ற உடலுக்கு மீண்டும் உயிர் வந்தால், உடலுறுப்புகள் உயிர்பெற்று எழுவதைப்போல், கண்ணனைக் கண்ட கோபியர்கள் மகிழ்ச்சியினால் தங்கள் கண்களை அகல விழித்துக்கொண்டு அவனைப் பார்த்தவண்ணம் எழுந்து நின்றார்கள்.

ஒருத்தி பெருமகிழ்ச்சியுடன் கண்ணனுடைய மலர்க் கரத்தைத் தன் இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு மெதுவாகத் தேய்க்கத் தொடங்கினாள்.

மற்ருெரு கோபிகை சந்தனக் குழம்பு பூசிய கண்ண னுடைய கரத்தைத் தன் தோளின்மீது வைத்துக் கொண்டாள். வேருெருத்தி கடினமான தரையில் அலைந்து திரிந்ததால் துன்புற்ற கண்ணனுடைய கால்களைத் தன் மார்பின் மீது வைத்துக் கொண்டாள்.

இன்னொருத்தி கண்ணனுடைய முகத்தாமரை யாகிய அமுதத்தைத் தன் இமைக்காத கண்களாகிய கோப்பையால் பருகினுள். இறைவன் திருவடிக்குச் சேவை செய்வதில் திருப்தி அடையாத பக்தர்களைப் போன்றே, அவர்களுக்கும் திருப்தி ஏற்படவில்லை. மற்றுமொரு கோபிகை கண்ணனைத் தன் கண் களாகிய நுழைவாயிலின் வழியே தன் இருதய மாகிய குகைக் கோயிலுக்கு அழைத்துச் சென்று கண்களை மூடிக்கொண்டு தியானத்தில் ஈடுபட்டுப் பேரின்பத்தில் மூழ்கி இருக்கும் யோகியரை போன்றிருந்தாள்.

கோபியர் எல்லாரும் பெருமகிழ்ச்சி அடைந் தார்கள். இறுதி லட்சியமாகிய மோட்சத்தை அடைய விரும்பும் மக்கள், ஆத்ம ஞானம் பெறு வதன்மூலம் உலகியல் துன்பங்களினின்றும் விடுபடுவதுபோல், கண்ணனைத் திரும்பப் பெற்றதன் மூலம் அவன் பிரிவாற்ருமையால் ஏற்பட்ட துன்பத் திலிருந்து கோபியர் விடுபட்டார்கள்.

துயரத்தினின்றும் விடுபட்ட கோபியர்கள் நடுவில் தன்னுடைய சக்திகளாகிய ஞானம், ஆற்றல், செல்வம், அழகு ஆகியவைகளால் சூழப் பட்ட விவரிக்க முடியாத அழகுடன் விளங்கும் புருஷோத்தமனைப்போல் புகழ்மிக்க அச்சுதன் விளங்கினுன்.

பின்னர் கண்ணன் கோபியர் புடைசூழ, குந்த மலர்களின் நறுமணத்தை நாடி வரும் தேனீக்கள் கூட்டம் கூட்டமாக வரும் யமுனை நதிக்கரையிலுள்ள மணற்பரப்புக்குச் சென்றான். அப்போது நிலவின் வெண்ணிறமான தண்ணொளியால் இரவின் இருட்டு விலகியது. அந்த இடம் மிகவும் அழகுடன் காணப்பட்டது. யமுனையின் இரு கரைகளிலும் இருந்த ஒளிவீசும் மணற்பரப்பு யமுனையின் அலைகளாகிய கரங்களால் சமப்படுத்தப்பட்டது போல் காணப்பட்டன.

கண்ணனைக் கண்ட மகிழ்ச்சியால், கோபியரின் உள்ளத்திலிருந்து துன்பம் நீங்கியது. வேதங்கள் ஒருவருக்கு ஆன்மீகத் தெளிவை உண்டாக்கி ஆசைகளை அறுத்த நிலையை உண்டாக்குவதுபோல், கோபியரும் ஆசையற்ற நிலையை அடைந்தார்கள். அவர்கள் வாசனைப் பொடிகள் தூவப்பட்ட தங்கள் மேலாடைகளைத் தரையின் மீது விரித்து தங்கள் அன்புக்குரிய கண்ணன் அமர்வதற்காக ஓர் ஆசனத்தை அமைத்தார்கள்.

மகா யோகியரின் உள்ளங்களாகிய ஆசனங்களில் அமர்ந்துள்ள எல்லாம்வல்ல இறைவன் கோபியரின் மேலாடைகளாலாகிய ஆசனத்தில் அமர்ந்தான். கோபியரின் கூட்டத்தின் நடுவில் அமர்ந்திருந்த கண்ணன் அளவற்ற அழகுடன் விளங்கினான். அதன் பின்னர் கண்ணன் மூவுலகங்களிலுமுள்ள அழகு அனைத்தும் ஒன்று சேர்ந்து திரண்டு வந்தாற்போன்ற அழகிய உருவத்தை எடுத்துக் கொண்டான்.

தங்கள் உள்ளத்தில் காதலைத் தூண்டிவிட்ட மயக்கும் புன்னகையும், கேலிப்பார்வைகளும் நிறைந்த கண்ணனுக்கு வரவேற்பு கூறி அவனுடைய

கைகளையும் கால்களையும் தங்கள் மடிமீது வைத்துக் கொண்டார்கள். அவனைப் புகழ்ந்ததோடு ஏதோ மனக்குறையுள்ளவர்களைப் போலப் பேசத் தொடங்கினார்கள்.

பின்னர் கோபியர் பின்வருமாறு சொல்லத் தொடங்கினார்கள். ''தங்களிடம் யார் பக்தியோடிருக்கின்றார்களோ அவர்களிடம் ஒரு சிலர் பற்றுடையவர்களாக இருக்கின்றார்கள். மற்றும் சிலர் தங்களிடம் பக்தி செலுத்தாதவர்களிடம் பற்றுடையவர்களாக இருக்கின்றார்கள். வேறு சிலர் தங்களிடம் பக்தி செலுத்துபவர்கள், செலுத்தாதவர்கள் ஆகிய இருவரிடமும் பற்றுடையவர்களாக இருப்பதில்லை. கண்ணா! இவ்வாறிருக்கும் நிலைமைக்கான காரணத்தைத் தெளிவாக விளக்கிக் கூறு.''

அதற்குக் கண்ணன் கீழ்வருமாறு பதில் சொல்லத் தொடங்கினான். ''தோழியர்களே! தங்களிடம் அன்பு செலுத்துபவர்களிடம் மட்டும் அன்பு செலுத்துபவர்கள் ஒரு தன்னல நோக்கத்தோடு செயல்படுகிறார்கள். அவர்கள் தன்னலம் கருதும் எண்ணங்களால் தூண்டப்படுகிறார்கள். அதில் நட்போ அல்லது எந்தவிதமான தர்மமோ கிடையாது. அது தன்னலமுள்ள முடிவை எதிர் நோக்கியதாகும். உண்மையில் அவர்கள் ஒருவரையொருவர் நேசிப்பதில்லை. தங்களையும் தங்கள் தன்னலம் கருதும் நோக்கங்களையும் நேசிக்கிறார்கள். தங்களையே திருப்தி செய்து கொள்வதைத் தவிர வேறு எந்தவிதமான நோக்கமும் அவர்களுக்குக் கிடையாது.

''தங்களை நேசிக்காதவர்களை நேசிக்கும் ஒருவர் அன்பும் இரக்கமும் நிறைந்த பெற்றோர்களுக்கு

ஒப்பாவார்கள். அவர்கள் நடத்தை நேர்மையும் நல்லெண்ணமும் நிறைந்தது. அவர்கள் இரக்க முள்ளவர்கள், அன்புள்ளவர்கள் என்று இருவகைப் படுவர். இவர்களுள் இரக்க குணமுள்ளவர்கள் தங்கள் பற்றின் காரணமாக உயர்ந்த தெய்வ நெறியில் மேன்மையை அடைவார்கள். அன்பின் காரணமாகச் செயல்படுவார்கள். என்றும் நீங்கா ததும் உறுதியானதுமான நட்பைப் பெறுவார்கள்.

''மூன்ருவதாகத் தங்களை நேசிப்பவர்களையும் நேசிக்காத மக்கள் உள்ளனர். அவ்வாறிருக்கத் தங்களை நேசிக்காதவர்களை அவர்கள் எவ்வாறு நேசிக்கமுடியும்? மற்றும் அவர்கள் நால்வகைப் படுவர்: (1) தங்களைப் பற்றியே எண்ணிக்கொண்டு வெளியுலகைப்பற்றி அறியாதவர்கள். (2) தாங்கள் ஆசைப்படும் பொருள்களை அடைந்துவிட்டவர்கள். (3) செய்நன்றியற்றவர்கள். (4) தங்கள் நல் வாழ்வை விரும்புபவர்களைத் துன்புறுத்த விரும்பு பவர்கள்.

தோழியர்களே! நான் இந்த மூன்று வகைகளில் எதிலும் சேர்ந்தவனல்லன். என்னிடம் பக்தி யுள்ளவர்களோடு பற்றுள்ளவனல்ல. இதனுல் நான் அவர்களை நேசிப்பதில்லை என்று பொருளல்ல. அவர்கள் தங்கள் பக்தியைப் பெருக்கிக்கொள்ள வேண்டும் என்றும், அவர்கள் உள்ளங்களை என்பால் ஈர்த்துக்கொண்டு அவர்கள் என்னிடத்திலேயே முழுதும் ஈடுபட்டிருக்கவேண்டும் என்பதுமே என் நோக்கம். அதனுல் அவர்கள் வேறு எதையும் லட்சியம் செய்யமாட்டார்கள். இடைவிடாது என்னிடம் பக்திசெய்து என்னையே நினைத்துக் கொண்டிருப்பார்கள். தன்னிடம் ஒரு காசுகூட இல்லாத ஒரு மனிதன், எதிர்பாராது சிறிது செல்வத்தைப்பெற்று சில நாட்களில் இழந்து

விட்டால் எவ்வாறு வேறு எதைப்பற்றியும் சிந்திக்காது அதைப்பற்றியே எண்ணிக்கொண்டிருக்கிருளே, அவ்வாறே என் அடியவனை ஒருமுறை சந்தித்த பிறகு அவனிடமிருந்து நான் மறைந்து விட்டால் அவன் என்னையே இடைவிடாது நினைத்துக்கொண்டிருப்பான்.

''விண்ணுலக மக்களைப்போல் எனக்கு நீண்ட ஆயுட்காலமிருந்தாலும் நீங்கள் அனைவரும் எனக்குச் செய்துள்ள மிகச்சிறந்த தொண்டுக்கு ஈடாக என்னுல் எதுவும் செய்யமுடியாது. என்னோடு நீங்கள் கொண்டுள்ள தொடர்பானது தூய்மை யானதும் குற்றமற்றதுமாகும். அன்புள்ள கோபியர்களே! என்பொருட்டு உங்கள் உதறி எறியமுடியாத இல்லற வாழ்க்கையை முற்றிலும் துறந்துவிட்டு வந்திருக்கின்றீர்கள். இதற்காக நான் என்றென்றும் உங்களுக்குக் கடமைப் பட்டவனுவேன். உங்களுடைய நல்ல பண்பே உங்களுடைய பக்திக்கேற்ற பரிசாகும் உங்களுடைய அறச்செயல் உங்களுக்குத் தக்க நற்பயனை அளிக்கட்டும்''.

## கோபியரின் அன்பு

கண்ணனிடம் கோபியர் காட்டிய அன்பு உடல் இன்பத்தைப் பொறுத்ததல்ல. அது மிகவும் உயர்ந்த வகையைச் சேர்ந்த அன்பு. அவர்களுக்குக் கண்ணன் இறைவனுகவே தோன்றினுன். பரம்பொருளின் நடமாடும் உருவமாகவே கண்ணனை அவர்கள் கருதினுர்கள். அவர்களுடைய நம்பிக்கை மிகவும் உறுதியானது. கண்ணனைப் பற்றி எண்ணும்போது உலகியல் செயல்களையே மறந்துவிட்டார்கள். அவர்கள் கண்ணனுடைய அன்பிலேயே மூழ்கி விட்டார்கள்.

கண்ணன் சிறுவயது முதலே அவர்களுடைய உள்ளங்களைக் கவர்ந்துவிட்டான். அவன் மிகவும் அழகான குழந்தை. அழகே வடிவெடுத்து வந்தாற்போலிருந்தான். எனவே பிறந்ததிலிருந்தே கண்ணனைக் கோபியர்கள் நேசித்தார்கள். அவர்கள் தத்தம் குழந்தைகளைச் சீராட்டிப் பாராட்டி அன்பு செலுத்துவதைப்போலவே கண்ணனிடம் அன்பு காட்டினார்கள். பிருந்தாவனத்திலிருந்த கோபிகைகள் கண்ணனைத் தங்கள் உடன்பிறந்தவனுகவே எண்ணி அன்பு காட்டினார்கள். உடன்பிறந்த சகோதர சகோதரிகளுக்கிடையே உடலுறவைப் பற்றிய அன்பு எங்கேனும் இருக்குமா? ஒரு பெண் தன் இளைய சகோதரனிடம் அன்பு செலுத்தி, சீராட்டி அவனுடன் விளையாடுகிருள். கண்ணன், கோபியர் ஆகியவர்களுக்கிடையே இந்தமாதிரியான அன்புதான் இருந்தது.

கண்ணனிடமிருந்த இந்த அன்பானது படிப்படியாக தெய்வீக அன்பாக மாறியது. தயிரைக் கடையும்போதும், கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவரும்போதும் அவர்கள் கண்ணனைப் பற்றியே எண்ணிக்கொண்டிருந்தார்கள். நீராடும் போது அவன் புகழைப் பாடினார்கள். உண்ணும் போதும் மற்றெல்லா நேரங்களிலும் அவனையே நினைத்துக்கொண்டு இருந்தார்கள். இறைவனைப் பற்றியே இடைவிடாது எண்ணிக்கொண்டிருந்ததால் அவர்களுடைய உள்ளம் 'கிருஷ்ணமயமாகவே' இருந்தது.

ஒருவேளை கோபியர்கள் பருவ வயதை அடைந்ததும் மற்றெல்லா உயிருள்ள பிராணிகளைப் போலவே, உடலின்பத்தைப் பற்றியும் எண்ணியிருக்கலாம். ஏனெனில் உண்பது, உறங்குவது, உடலுறவு ஆகிய மூன்றும் உயிர்கள் எல்லாவற்றுக்கும் பொதுவானது.

ஆனால் கண்ணன் கோபியரின் உள்ளத்திலிருந்ததை நன்கு அறிவான். எனவே அவர்கள் மனதிலிருந்த காம இச்சையை அடியோடு நீக்கி விட்டு, அவர்கள் உள்ளத்தைச் சரியான வழியில் செலுத்தினான். இந்த நோக்கத்துடன்தான் கண்ணன் கோபியர்களுடன் ராச லீலையில் ஈடுபட்டான்.

ராச லீலை முழுவதிலும் கண்ணன் தன்னைப் போன்றே பல உருவங்களில் தோன்றி, கோபியர்களை வியப்பிலும் திகைப்பிலும் ஆழ்த்தினான். இந்த விந்தையான காட்சியால் கோபியர்கள் மனதிலிருந்த உடலுறவைப்பற்றிய எண்ணம் முற்றிலும் மறைந்துவிட்டது. தேவர்கள் வானத்திலிருந்து பெய்த மலர் மாரியைக் கண்டார்கள். வித்தியாதரர்களும், கந்தர்வர்களும், யட்சர்களும், சாரணர்களும் இறைவன் புகழைப் பாடுவதையும் பார்த்தார்கள். புலனுணர்வுப் பொருள்களால் பெறுவதைவிட பல்லாயிரக் கணக்கான அளவுக்கதிகமான பேரின்பத்தை இறைவனுடன் கூடியிருந்தபோது பெற்று அனுபவித்தார்கள். அப்போது இறைவனுடன் ஒன்று கலந்த சமாதி நிலையை அனுபவித்தார்கள்.

''இதுதான் இது, இதுதான் அது'' என்ற வேற்றுமை உணர்வுக்குக் காரணம், பல வேறு பக்கங்களிலும் நாட்டம்கொண்டு இறைவனோடு ஒன்றுபடாத மனத்தையுடைய ஒரு மனிதனின் மன மயக்கம்தான். கட்டுப்பாடற்ற மனதைப் படைத்துள்ள மனிதன் பொருள்களுக்கிடையே வேறுபாடுகளைத்தான் காண்பான். இந்தத் தவற்றினால்தான் உயர்வும் தாழ்வும், நன்மையும் தீமையும், சரியும், தவறும் காணப்படுகின்றன.

வெளியேயுள்ள பொருட்களை நாடிச்செல்லும் புலன்களின் இயல்பாகிய செயலைக் கண்டு திகைப்பும் மயக்கமும் அடைந்த கட்டுப்பாடற்ற உயிரானது உலகத்தில் தன்னை தனித் தன்மையுடையதாகக் கருதிக்கொண்டு ஆசைகளின் வயப்பட்டு, புலனுகர்ச்சியை அனுபவிக்கிறது. கர்மம், அகர்மம், விகர்மம் எனப்படும் கடமையைச் செய்தல், கடமையைச் செய்யாதிருத்தல், செய்யக் கூடாதனவற்றைச் செய்தல் ஆகியவை மனம், புலன்கள், அறிவு ஆகியவற்றால் உண்டாகும் இந்த வேற்றுமையுணர்வாகிய மயக்கத்தினால்தான் ஏற்படுகின்றன. உயர்வு அல்லது தாழ்வு, நன்மை அல்லது தீமை, சரி அல்லது தவறு என்னும் எண்ணங்களை உடைய ஒரு மனிதனிடம்தான் கடமையைச் செய்தல், கடமையைப் புறக்கணித்தல், தவறான கடமையைச் செய்தல் என்பவை நிகழ்கின்றன. வேறுபாடு கருதும் மயக்கத்தின் காரணமாகத்தான் சரி அல்லது தவறு, நன்மை அல்லது தீமை, உயர்வு அல்லது தாழ்வு என்னும் எண்ணங்கள் தோன்றுகின்றன. சரி அல்லது தவறு, நன்மை அல்லது தீமை, உயர்வு அல்லது தாழ்வு என்ற எண்ணங்களை உடையவர்களுக்கு தான், செய்ய வேண்டிய கர்மம், செய்யக் கூடாத கர்மம், விலக்கப்பட்டவைகளைச் செய்தல் ஆகியவற்றைப்பற்றி வேதங்களில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. எனவே ஒருவன் அகந்தையுணர்வை அகற்றி, மனதையும் புலன்களையும் அடக்கி, இந்தப் பிரபஞ்சத்திலுள்ள எல்லாப் பொருள்களுமே பிரம்மம் என்று கருதவேண்டும். ஒருவன் தன்னிடமுள்ள சிறப்பான தனித் தன்மையை நன்கு உணர்ந்து, பிரபஞ்சத்தோடு இணைந்து பேரின்பமடைந்து, பரந்த பிரபஞ்சத்தையே தனக்குள்ளேயிருக்கும் ஆன்மாவில் கண்டு அந்த ஆன்மாவைப் பரம்பொருளில் காண வேண்டும்.

நன்மை தீமை என்ற எண்ணங்களைக் கடந்து உயர்வு பெற்றவன், தீய விளைவுகளுக்கு அஞ்சி செய்யக்கூடாது என்று விலக்கப்பட்ட செயல்களைச் செய்யாமலிருக்கமாட்டான். தனக்கு மேன்மை தரும் என்ற எண்ணத்துடன் செய்யவேண்டிய செயல்களைச் செய்யமாட்டான். அவன் ஒரு குழந்தையைப் போன்று செயல்படுகிறான்.

வேத நூல்களின் அறிவுரைகளில்லாமலேயே அவனிடம் இயல்பாகவே நன்மை தீமை என்ற உணர்வு இருக்கும். அவன் அகந்தையை முற்றிலும் நீக்கிவிட்டான். இந்த உலகின் சட்டதிட்டங்களால் அவன் பாதிக்கப்படமாட்டான். அவன் செய்ய வேண்டிய கடமைகள் எதுவுமில்லை. அவன் கர்மத்திற்கு அப்பாற்பட்டவன். கர்மங்களால் அவனை ஒன்றும் செய்ய முடியாது. உலகுக்கு உணர்த்துவதற்காக அவன் சில செயல்களைச் செய்யலாம். அல்லது செய்யாமலும் இருக்கலாம். அவன் சரி அல்லது தவறு என்பதன் எல்லைகளை மீறிச் செயல் படுவான்.

இதற்குமுன் ஏற்படாத விந்தையான அனுபவத்தின் காரணமாக கண்ணன் ஒரு சாதாரண மனிதப் பிறவி அல்ல என்பதை கோபியர்கள் உறுதியாக நம்பினார்கள். கண்ணன் இறைவனே என்பதில் உறுதியாக இருந்தார்கள். ஆனால் சில நேரங்களில் நந்தகோபன், யசோதை ஆகியவர்களின் மகனாகவே எண்ணினார்கள். இறைவனின் யோகமாயை காரணமாக ராசலீலை நடக்கும் வரையில் கண்ணன் இறைவன்தான் என்ற எண்ணம் அவர்களுக்குத் தோன்றவில்லை.

அவர்கள் கண்ணனைப் பரமாத்மாவாகவே கருதினார்கள் என்பதற்கு பாகவதத்திலுள்ள

கோபிகா கீதமே ஆதாரம். தங்களிடமிருந்த கீழ்த் தரமான காம இச்சைகளை நீத்து தீவிரமான தெய்வீகப் பிரேமையினால் பகவானோடு தங்களை இணைத்துக்கொண்டார்கள்.

கண்ணனுடைய மனிதத் தன்மைக்கு அப்பாற் பட்ட இளமைப் பருவ விளையாட்டுகளிலிருந்து அவனுடைய எல்லாமறிந்த இயல்பையும், ஒப்பற்ற ஆற்றலையும் அவர்களால் நம்ப முடிந்தது. மனிதனு டைய ஆசைகள் அனைவற்றையும் நிறைவேற்றும் இறைவனிடம் கீழ்த்தரமான ஆசைகளை வைக்கக் கூடிய அறிவற்றவர்கள் எவரேனும் இருப்பார்களா? மக்கள் அனுபவிக்கக்கூடிய இன்பங்கள் அனைவற்றுக் கும் காரணமாக இருப்பவன் இறைவனே. அவனை நேருக்குநேர் பார்த்தபின்னரும் அவனிடம் கீழ்த்தர மான ஆசைகளை உடைய அறிவற்றவர்கள் எவரேனும் இருப்பார்களா? சுத்தமான கற்கண்டு ஏராளமாகக் கிடைக்கும்போது கருப்பு நிறமுள்ள சர்க்கரையை யாராவது விரும்புவார்களா?

இதிலிருந்து கோபியர்கள் கண்ணனிடம் வைத் திருந்த அன்பானது தெய்வீகமானது என்று தெரி கிறது. அவர்களுடைய அன்பு அனன்ய பக்தி யாகும். உடலின்பத்தை நாடும் கீழ்த்தரமான ஆசையிலிருந்து அவர்கள் விடுபட்டவர்கள்.

## ராசலீலையின் இரகசியம்

பக்தர்களை அவர்களுடைய தூய்மையான தெய்வீக அன்பின் காரணமாக இறைவனோடு ஒன்று படச் செய்வதுதான் ராசலீலை என்னும் தெய்வீக விளையாட்டு. ரசம் என்பது பிரேமை அல்லது அன்பின் சாறு. அது தெய்வீக அன்பு அல்லது மிக மேலான உணர்வை வெளிப்படுத்துவதாகும்.

அதனால் இறைவனோடு புனிதமான ஒன்றுபட்ட தன்மையை அடைவதுதான் நோக்கம்.

கண்ணபிரானின் ராசலீலை விந்தைகளுக்குள் எல்லாம் மிகவும் விந்தையானது. இரகசியங்களுக்குள் எல்லாம் இரகசியமானது. அறிவுக்கண் கொண்டு ஆராயக்கூடிய விஷயமல்ல அது. அது அடியவர்களின் அமைதியான தியானத்திற்குரிய புனிதமான விஷயமாகும். இறைவனிடம் பக்தியில்லாதவர்களுக்கும், மட்டமான விமர்சகர்களுக்கும் அதைத் தெரிவிக்கக்கூடாது. அதை பக்தியுடனும், நம்பிக்கையுடனும் படிக்கவேண்டும். இறைவனிடம் சரணடைந்து அவனோடு ஒன்றுபடுவதற்குரிய வழியைக் காட்டும். பக்தியின் சிகரமாகிய 'மாதுரிய பாவம்' அதில் அடங்கி இருக்கின்றது.

தூய அன்பின் மூலமாக உடலிச்சையை அழிப்பதற்காகத்தான் கண்ணன் ராசலீலையைச் செய்து காட்டினார். காமத்தை விருப்பு வெறுப்பற்ற நிலையாகவும், தூய அன்பாகவும் மாற்றக்கூடிய வழியை ராசலீலையின் மூலமாக மக்களுக்குக் கற்பித்தார். உடலின்பத்தைப்பற்றிய வாசனைகள், உணர்வுகள் ஆகியவைகளிலிருந்து மனதைத் திருப்பிவிடும் நெறியையும் போதித்தார். மாதுர்ய ரசத்தின்மூலம் ஒருவர் ஆத்ம நிவேதனம் அல்லது பரிபூரண சரணாகதி அடைந்து, உயிர்களுக்கு எல்லாம் பதியாக விளங்கும் பரமாத்மாவோடு ஒன்றுபடுதலாகிய சாயுஜ்ய பதவியை அடையலாம் என்பதைக் காட்டினார்.

ராசலீலை என்பது இறைவன்மீதுள்ள நம்பிக்கையை வளர்ப்பதற்கும், புனிதத் தன்மை பெற ஆன்மீகத்தை வலுப்படுத்துவதற்கும், மனித

இனத்தின் — முக்கியமாக கோபியரின் — மனத்தை வளப்படுத்துவதற்கும் நடத்தப்பட்ட ஒரு விளையாட்டாகும்.

ராசலீலை நடத்தும்போது கண்ணனுக்கு வயது பத்து. அது நடக்கும்போது கோபியர்கள், உள்ளும் புறமும், சுற்றிலும் எங்கும் கண்ணனையே கண்டார்கள். தங்கள் கணவன்மார், பெற்றோர், குழந்தைகள் அனைவரையும் மறந்து விட்டார்கள். பரம்பொருளான கண்ணனைக் கண்டு உள்ளம் உருகினார்கள். பக்தியாகிய தீயினால் இதயங்கள் ஒன்றுபட்டன. பிரேமை அல்லது அன்பு என்னும் பசை அவர்கள் உள்ளங்களைக் கண்ணன் உள்ளத்தோடு ஒட்டிக்கொள்ளச் செய்தது. கோபியர்கள் சாதாரணப் பெண்களல்ல. அவர்கள் மிகவும் உயர்ந்தவர்கள்.

பாகவதத்தின் பத்தாவது ஸ்கந்தத்தில் 29, 30, 31, 32, 33 ஆகிய ஐந்து அத்தியாயங்கள் ராசலீலையைப் பற்றி விவரிக்கின்றன. ராசலீலை தொடங்கிச் சிறிது நேரம் கழித்து கோபியரின் கர்வத்தை அடக்குவதற்காக கண்ணன் மறைந்து விடுகிறான். கோபியர்கள் கண்ணனைத் தேடிச் செல்கிறார்கள். யமுனைக் கரையின் மணலில் அவன் வரவை எதிர்நோக்கிக் கூட்டமாக நிற்கிறார்கள். கோபிகா கீதம் என்னும் பாட்டைப் பாடுகிறார்கள். கண்ணன் அவர்கள் நடுவில் திடீரென்று தோன்றி அவர்களுடன் சேர்ந்து நடனமாடத் தொடங்கினான்.

பாகவதத்தின் பத்தாவது அத்தியாயம்தான் அந்த நூல் முழுவதன் சாரமாகக் கருதப்படுகிறது. ராசலீலையைப் பற்றிய ஐந்து அத்தியாயங்களும், பத்தாவது ஸ்கந்தத்தின் சாரமாகக் கருதப்படுவது

பொருத்தமுள்ளதாகிறது வட மொழி, இலக்கியம் முழுவதிலும் தேடினாலும் ராச பஞ்சாத்தியாயத்தைப் போன்ற வேறொரு பகுதியை எங்கும் காண முடியாது. அந்த அத்தியாயங்கள் உள்ளத்தில் கிளர்ச்சியை உண்டுபண்ணுகின்றன, உயர்ந்த நிலையிலுள்ளன, விந்தையாக உள்ளன, அவற்றிலுள்ள தத்துவக் கருத்துக்கள் மிகவும் ஆழமானவையும், மேலானவையுமாகும்.

சாஸ்திரங்களையும், கடவுள் இருப்பதையும் நம்புகின்றவனும், தன் குருவினிடத்தில் பக்தியுள்ளவனும், ஆசையையும், புலன்களையும் அடக்கியவனும், தூய்மை, விருப்பு வெறுப்பற்ற பண்பு, பகுத்தறியும் தன்மை ஆகியவை நிரம்பியவனும், இறைவனை நேரில் தரிசித்து அவனோடு ஒன்றுபட விரும்புகின்றவனும், அடியவர்கள் ஞானிகள் ஆகியவர்களிடையே வாசம் செய்பவனும் ஆகிய ஒருவன்தான் ராசலீலையைப் படிக்கத்தக்க அதிகாரி அல்லது தகுதியுடையவன் ஆவான். அப்படிப்பட்ட ஒருவனுக்குத்தான் ராசலீலையின் இரகசியமும் தெய்வீக நோக்கமும், பயனும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெள்ளென விளங்கும்.

காம இச்சை படைத்த ஒருவனுக்கு உடல் வேட்கையும் பால் சேர்க்கைக்குரிய வாசனைகள் நிரம்பியிருப்பதாலும், ஐம்புலன்களையும் மனம் போல் திரியவிட்டிருப்பதாலும், புலன் வாழ்க்கையைத் தவிர மேலான எதையும் விரும்பாமலிருப்பதாலும், புலனுணர்வுக்கு மேற்பட்ட எதையும் தெய்வீக வாழ்க்கையும் பேரானந்தத்தையும் நம்பாதவனும் ஆகிய ஒருவனுக்கு கண்ணனுடைய தெய்வீக லீலைகளைப்பற்றிய இந்த ஐந்து அத்தியாயங்களும் பயனற்ற ஒரு பகுதியாகும். பாகவதத்தின்

இந்தப் பகுதியைப் படிப்பதனுல் எவ்வித நற்பயனும் அவனுக்கு ஏற்படாது.

இந்தப் பகுதியான ராசலீலையிலுள்ள பாடல்களைப் படிக்கும்போது, நாரதர், வியாசர், சுகர், சௌரங்கர் போன்ற முனிவர்களும் அடியவர்களும் ஆனந்தக் கண்ணீர் சொரிந்திருக்கின்றனர். நைமிசாரணிய வனத்திலிருந்த முனிவர்கள் தெய்வீகப் பிரேமையைப்பற்றி ஆழ்ந்த உணர்வுடன் மிகவும் கவனமாகக் கேட்டார்கள். பரீட்சித்து மன்னன் தான் இறப்பதற்கு முன், மோட்சத்தைப் பெற வேண்டுமென்ற நோக்கத்துடன், அதைக் கேட்டான். பன்றிக்கு முன்னுல் முத்துக்களை எறிந்தால் அவற்றின் மதிப்பு அதற்கு எப்படித் தெரியும்? அதைப்போலவே உண்மையான பக்தன் இறைவனேடு ஒன்றுபட உதவும் மேன்மையான வழியைப் பற்றிய விஷயங்கள் ஆசை நிறைந்து, உலகியல் வாழ்க்கையில் உழலும், தெய்வ நம்பிக்கையற்ற ஒருவனுக்கு எவ்விதத்திலும் பயன்படுமா?

ராசலீலை முழுவதும் தெய்வீக அன்பு அல்லது பக்தியின் முடிவைப்பற்றிய விஷயங்கள்தான் நிரம்பி இருக்கின்றன. அது ஒரு புனிதமான யக்ஞம் அல்லது வேள்வியாகும். தனிப்பட்ட ஆன்மாக்களாகிய (கோபியர்கள்) மிகவுயர்ந்த பக்தியில் மூழ்கி பரமாத்மாவாகிய இறைவனில் கரைந்துவிடுகிருர்கள். இரண்டும் ஒன்றுபடுகின்றன. பரபக்தியின் வழியில் வேதாந்தத்தின் தனித்தன்மை தெளிவாகிறது. கண்ணனுக்கும் விரஜா நாட்டு கோபியருக்குமிடையே இருந்த உறவு மிகவும் புனிதமானது. உடலைப்பற்றிய விஷயம் அதில் எள்ளளவும் கிடையாது.

மூவுலகங்களையும் படைத்து, காத்து, அழிப்பவனும், படைக்கப்பட்ட உயிர்களுக்கு கருப்பையாக

விளங்குபவனும், தூய்மையே உருவானவனும், தர்மத்தை நிலைநிறுத்துகின்றவனும், உலக குருவுமான இறைவனுக்கு உடலின்பத்தைப் பற்றிய எண்ணம் எள்ளளவேனும் இருக்குமா ?

ராசலீலையின் நோக்கம் இறைவனோடு ஒன்றுபடுவது. இறைவனோடு ஒருசேரக் கலப்பது என்பது தூய அன்பினால் முடியும். கோபியர்களிடம் அந்த அன்பு இருந்தது. கண்ணனுக்கும் கோபியருக்குமிடையே இருந்த உறவில் தூய அன்புதான் இருந்தது. உடலைப்பற்றிய இச்சை சிறிதளவும் கிடையாது. அந்த உறவு மிகவும் தூய்மையானதும் புனிதமானதுமாகும். உலகியல் உள்ளம் படைத்த மக்கள் எவ்வளவு அறிவாளிகளாக இருந்தாலும், அந்த தெய்வீக அன்பின் உண்மையான இயல்பைப் பற்றி அவர்களுக்கு ஒன்றும் தெரியாது. உலகியல் மனப்பான்மையுடைய ஒருவன் ஆண், பெண்களின் பாலுணர்ச்சியைப்பற்றித்தான் எண்ணிக்கொண்டிருப்பான். ஏனெனில் அவன் அறிவும், புரிந்து கொள்ளும் தன்மையும் அந்த அளவுக்கு தெளிவாக இல்லை. தன்னுடைய தாயினிடத்தில் தனக்கு இருக்கும் அன்பை எண்ணிப்பார்ப்பானானால், இந்த தெய்வீக அன்பின் இயல்பு ஓரளவுக்கு அவனுக்குப் புரியலாம். அந்த அன்பு உடலுறவுக்கு அப்பாற்பட்டதாக இருக்கின்றதல்லவா ?

இந்த லீலையின் மூலமாகத்தான் அடியவர்கள் உண்மையை உணர்ந்துகொள்ள வேண்டுமென்று விரும்பி, இறைவன் தன்னுடைய யோக மாயையின் மூலம் வழிவகுத்தார். ராசலீலை காமத்தை வெல்வது எப்படி? என்பதை உணர்த்துகிறது. இந்த ஐந்து அத்தியாயங்களிலும் உலகியல் பொருள்களை எவ்வாறு பிரித்துணர்வது என்பதைப்பற்றி விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது.

ஒரு இலையுதிர்கால இரவு, கண்ணன் யமுனையின் கரையிலிருந்து இனிமையாகக் குழலூதிக்கொண்டிருக்கிறான். நிலவொளி அழகாக வீசிக்கொண்டிருக்கின்றது. கோபியர்களின் உள்ளங்கள் மகிழ்ச்சியால் ததும்பிக்கொண்டிருக்கின்றன. அவர்கள் தங்கள் அன்பனான கண்ணன் இருக்குமிடத்துக்கு ஓடி வருகிறார்கள். தங்கள் வீட்டு வேலைகளை எல்லாம் அறவே மறந்துவிட்டு கண்ணன் நினைவிலேயே மயங்கி இருக்கிறார்கள்.

கண்ணன் சொன்னான், ''உங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் சென்று உங்கள் கணவன்மார், பெற்றோர், மக்கள் ஆகியவர்களைக் கவனியுங்கள். கன்றுகளும், குழந்தைகளும் அழுது கொண்டிருக்கின்றன. பெண்களுக்குரிய ஒரு சிறந்த மதம் தங்கள் கணவன்மாரிடம் பக்தி செலுத்துவது.''

''இறைவா! உன் பொருட்டு நாங்கள் எல்லாவற்றையும் தியாகம் செய்துவிட்டோம். உன் திருவடிகளை நாடி வந்துள்ளோம். எங்களைக் கைவிட்டுவிடாதே. எல்லா மதங்களுடைய கொள்கைகளும் உன்னை அடைவதையே இறுதி இலட்சியமாகச் சொல்கின்றன. இடைவிடாது இன்பம் தரும் உன்னைச் சார்ந்த நாங்கள் துன்பத்துக்கு அடிப்படைக் காரணமான கணவன்மார், மக்கள் ஆகியவர்களைப்பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? உனக்குத் தொண்டு செய்ய எங்களுக்கு அனுமதி கொடு,'' என்று கோபியர் பதிலளித்தார்கள்.

அவர்களுடைய இரங்கத்தக்க வேண்டுகோள்களைக் கேட்ட கண்ணன் அவர்கள்மீது பரிவு கொண்டான். அவர்களை அங்கே தங்க அனுமதித்தான். இறைவனுடன் இருக்கிறோம் என்ற எண்ணத்தால் கோபியர்கள் மிகவும் கர்வமடைந்தார்கள். உகிலுள்ள மற்றெல்லாரையும்விடத் தாங்களே

உயர்ந்தவர்கள் என்று எண்ணினார்கள். அவர்களுடைய கர்வத்தை அடக்குவதற்காக கண்ணன் திடீரென்று மறைந்துவிட்டான்.

கோபியர்கள் மிகவும் உள்ளம் வருந்தினார்கள். கண்ணனைத் தேடி காடுமேடு எல்லாம் சுற்றித் திரிந்தார்கள். மரங்களையும், செடிகளையும், கொடிகளையும், பூமியையும், மானையும், தங்கள் அன்புக்குரிய கண்ணனைக் கண்டார்களா என்று கேட்டார்கள்.

கண்கள் குளமாகி நீர் சொறிந்தன. அவர்கள் எண்ணமெல்லாம் கண்ணனைப் பற்றியே இருந்தன. கண்ணனைப் பற்றியே பேசினார்கள். அவர்களுக்கு எல்லாம் கண்ணனாகவே இருந்தது. கண்ணனுடைய பற்பல லீலைகளை நடித்துக்காட்டத் தொடங்கிவிட்டார்கள். யமுனை நதிக்கரைக்குச் சென்று கண்ணனைப்பற்றி ஒரே குரலில் சேர்ந்துபாடி அவன் திரும்பிவர வேண்டுமென்று உருக்கமாகப் பிரார்த்தனை செய்தார்கள். அவர்கள் பாடிய பாட்டுக்கள் அமுதமென இனித்துக் கேட்போர் உள்ளத்தைக் கவரக்கூடியவையாக இருந்தன.

கண்ணன் புன்னகையுடன் அவர்கள் முன்னே தோன்றினான். கோபியர்கள் உள்ளம் மகிழ்ந்ததால் அவர்கள் பிரிவுத் துன்பம் நீங்கியது.

''அன்புள்ள கோபியர்களே! என் பொருட்டு உங்கள் கணவன்மார், மக்கள், சுற்றத்தார், நண்பர்கள் ஆகியவர்களைத் துறந்துவிட்டு வந்திருக்கின்றீர்கள். உங்கள் அன்பு தொடர்ந்து பெருக வேண்டுமென்பதற்கு நான் சிறிது நேரம் உங்களிடமிருந்து மறைந்திருந்தேன். நான் எப்பொழுதும், அழிவற்று வாழ்ந்திருந்தாலும் உங்கள் அன்புக்கு

ஈடாக என்னால் எதுவும் தரமுடியாது. நீங்கள் என்னுடன் தூய்மையானதும், புனிதமானதுமான ஓர் உறவை ஏற்படுத்திக்கொண்டுவிட்டீர்கள்,'' என்று கண்ணன் கோபியரிடம் கூறினான்.

பிறகு கண்ணன் கோபியருடன் நடனமாடினான். கண்ணனுக்கு ஒவ்வொரு பக்கத்திலும் ஒரு கோபிகை இருந்தாள். ஒவ்வொரு கோபிகையின் இரண்டு பக்கங்களிலும் கண்ணன் இருந்தான். கோபியர்கள் ஒரு வட்டமாக நின்றுகொண்டார்கள். யோகீஸ்வரனான கண்ணன் ஒவ்வொரு கோபிகைக்குப் பக்கத்திலும் இருந்தான். ஒவ்வொரு கோபிகையும் கண்ணன் தன் அருகில் இருப்பதாக எண்ணினாள். என்ன விந்தை! எண்ணிக்கையில் தன்னைப் பெருக்கிக்கொள்ளும் விந்தையை எல்லாம் வல்ல இறைவனால்தான் செய்ய முடியும். இதிலிருந்து இறைவனின் சர்வ வல்லமை பொருந்திய பெருமை விளங்கவில்லையா? அந்தக் காட்சியைக் காணப் பெரு விருப்புடன் வானத்தில் தேவர்கள் தங்கள் தேவிமாருடன் ரதங்களில் கூட்டமாகத் தோன்றினார்கள். அங்கிருந்து மலர் மாரி பொழிந்தார்கள். கந்தர்வர்கள் கண்ணன் புகழைப் பாடினார்கள்.

இராதை கோபியர்களின் தலைவி. அவள் கண்ணனை ஆராதனை செய்தாள். இராதிகா என்றால் ஆராதனை (வழிபாடு) என்று பொருள். அவள் அன்பே உருவானவள். இராதையும் கண்ணனும் ஒன்று. அவர்கள் தீயையும் வெப்பத்தையும்போல் பிரிக்கமுடியாதவர்கள்.

தான்தான் உண்மையான கணவன் அல்லது நண்பன் என்பதைக் கண்ணன் இராசலீலையின்மூலம் விளக்கிக் காட்டினான். இந்த உடலில் உள்ள புருஷோத்தமன் அவன்தான். உதவி செய்பவனும்,

இன்பம் துய்ப்பவனும், இறைவனும், பரமாத்மா வும் அவனே. புலன்கள் எல்லாவற்றிலும் அவனிருக் கிருன். எல்லா உயிர்களிலும் குடி இருக்கிருன். அவனே உடல், மனம், உயிர், புலன்கள் ஆகியவை களாக இருக்கிருன். உண்மையான நடிகனும் பார்த்து அனுபவிப்பவனும் அவனே. இறைவனிடத் திலிருந்து விலகிய மனம் படைத்தவர்களும்கூட சிருங்காரரசம் அல்லது காதல் காவியங்களால் அவனுல் கவரப்படுகிருர்கள். எனவே தான் கண்ணனின் காதல் காவியங்கள் படைக்கப் பட்டுள்ளன. இறைவனின் யோக மாயையால் விரஜாநகரில் உள்ள ஆண்கள் தம் மனைவிமார் எப்போதும் தங்கள் அருகிலேயே இருப்பதாக உணர்ந்தார்கள். எவ்வளவு பெரிய விந்தையான செயல்! ஒரு கோபிகையை வீட்டிலேயே இருக்கும் படி அவள் வீட்டிலுள்ளவர்கள் கட்டாயப்படுத்தி ஞர்கள். உடனே அவள் தன் பூத உடலைவிட்டு வெளியேறி இறைவனேடு சேர்ந்துகொண்டாள். இதிலிருந்து கண்ணன் புருஷோத்தமனென்றும் கோபியர் உடலின்மேலுள்ள இச்சை காரணமாக கண்ணனிடம் செல்லவில்லை என்றும் விளங்க வில்லையா? கோபியர்கள் கண்ணனுடைய சிறந்த அடியவர்கள். அவர்கள் பக்தியின் உயர்ந்த எல்லை யாகிய மாதுர்ய பாவத்தின்மூலம் கண்ணனை வழி பட்டு பக்தியின் சிகரத்தை அடைந்தார்கள்.

சம்சாரசாகரத்தில் மூழ்கி உடலுறவைப்பற்றிய எண்ணம் மட்டும் நிறைந்த மனத்தை உடைய மக்கள் இறைவனைப் பற்றித் தவருக எண்ணி, தெய்வீக விளையாட்டாகிய ராசலீலையைப்பற்றிக் குறை கூறுகிருர்கள்.

இராதை கண்ணனை நேசித்ததுபோல் நாம் இறைவனை நேசிக்கவேண்டும். நம் மறை நூல்களில்

எல்லா வகையான அன்புகளிலும் ராதையின் அன்பு தான் மிகச் சிறந்ததாகப் போற்றப்பட்டுள்ளது.

ராதையின் அன்புக்கு மூவுலகங்களும் இணை யாகாது. கோபம் ஏற்பட்டதாலும் தன் கர்வத் துக்கு பங்கமேற்பட்டதாலும் ராதை ராசலீலை யிலிருந்து வெளியேறினாள். கண்ணனும் கோபியரின் நடன அரங்கின் வட்டத்திலிருந்து வெளியேறி வருத்தத்துடன் ராதையைத் தேடி காடுகளின் ஊடே திரிந்தான். அவளைக் காணமல் அவனுக்கு மிகுந்த துயரமேற்பட்டது. ஆயிரக்கணக்கான கோபியர்களாலும் அவனைச் சமாதானப்படுத்த முடியவில்லை. இதிலிருந்து ராதையின் சிறப்பை நீங்கள் உணரலாம்.

இராதை மகாபாவம் அல்லது மிக மேலான உணர்ச்சிகளே உருவமானவள். ராசலீலையின் இரகசியத்தைச் சாதாரணமான அடியவர்களால் அறியமுடியாது. சகிகள் என்று சொல்லப்பட்ட கோபியர்கள்தான் இந்த இரகசியங்களை உணரும் பெரும் பேற்றைப் பெற்றுர்கள். அவர்களுக்குத் தான் அதற்கேற்ற தகுதி இருந்தது. சாந்த, தாஸ்ய, வாத்சல்ய பக்தர்கள் இதை உணரமுடியாது. கண்ணனை மாதுர்ய பாவம் அல்லது சகி பாவத் தோடு வழிபடும் பக்தர்களால்தான் இந்த ரசத்தை அனுபவிக்க முடியும்.

கோபியர்களின் அன்பு உடலுறவைப் பொறுத்த தல்ல. அது தூய தன்னலமற்ற தெய்வீக அன்பாகும். அவர்கள் கண்ணனைத் தழுவிக்கொள்ள ஆசைப்படவில்லை. ஆனுல் கண்ணன் ராதையைத் தழுவிக்கொள்ளச் செய்யவேண்டுமென்று தங்களா லியன்ற அளவு முயன்றுர்கள். இதைச் செய்து முடிப்பதற்காக கண்ணனை ராதையிடம் பல முறை

பல பொய்க் காரணங்கள் சொல்லி அனுப்பிவைத்தனர். இந்த மாதிரி செய்ததால் தன்னலத்தோடு இன்பமனுபவிப்பதைவிட பல்லாயிரமடங்கு பேரின்பம் பெற்றுர்கள். கோபியரின் தூய, தன்னலமற்ற அன்பைக் கண்டு கண்ணன் மிகவும் மனமகிழ்ந்தான். கோபியரின் தன்னலமற்ற அன்பானது பிரேம ரசத்தைத் தீவீரமடையச் செய்தது.

ஒரு கோபி தான் இன்பமடைவதற்காகக் கண்ணனுடன் விளையாட வேண்டுமென்று ஒருக்காலும் விரும்பவில்லை. ராதையைத் தழுவிக் கொள்ளச் சொல்லிக் கண்ணனைத் தூண்டுவதில் பெரிதும் மன மகிழ்ச்சி அடைந்தாள். கண்ணனுகிய காதலின்மேல் கொடியாகப் படர்ந்தவள் ராதை. மற்ற கோபியர்கள் அக்கொடியிலிருந்த இலைகள், மலர்கள் ஆவார்கள். கண்ணனது அன்பெனும் அமிர்தம் அந்த கொடிக்கு நீராகப் பாய்ந்தால், அதிலுள்ள மலர்களும், பூக்களும், கிளைகளும் தங்களுக்கே நீர் பாய்ச்சினுல் ஏற்படும் மகிழ்ச்சியைவிட பல்லாயிரம் மடங்கு மகிழ்ச்சியடைகின்றன.

கண்ணனை அடைய விரும்பினுல், ஒரு கோபியைப்போல அவனுக்குத் தொண்டு செய்ய வேண்டும். ஒரு கோபியின் மனப்பாங்கோடு அவனைப் போற்ற வேண்டும். கோபி பாவத்துடன் கண்ணனை வழிபடும் அடியவள் மாதுரிய பாவத்தை அனுபவிக்கிருள்.

ராசலீலை தூயமனம் படைத்த அடியவர்களால், சூழப்பட்ட தனி இடத்தில், பக்தர்களாகிய அடியவர்கள் முன்னுல் நடத்திக் காட்டப்பட வேண்டும். அப்போதுதான் பார்ப்பவர்களின் மனதில் நீங்காத நினைவை உண்டாக்கி, அவர்களிடம் பக்தியை உண்டாக்கும்.

இக்காலத்தில் தன்னலமுள்ள பொய் உள்ளம் படைத்தவர்கள் பணம் சம்பாதிப்பதற்குத் திறந்த அரங்குகளில் கண்ணனாகவும், ராதையாகவும் நடிக்கின்றார்கள். இது பார்ப்பவர்களின் மனங்களில் ஓர் இழிவான எண்ணத்தையே உண்டாக்கும். இந்த் மாதிரி ராசலீலையைக்காண மக்கள் போகக்கூடாது. இந்த மாதிரி விஷத்தை பரவச் செய்து மக்களுக்குத் தீங்கு செய்வதை நாம் ஆதரிக்கக்கூடாது. உடலுக்கு அடிமையாகி காமத்துக்கு அடிமைப் பட்டவன் மனத்தால்கூட ராசலீலையை எண்ணிப் பார்க்கக்கூடாது. அறியாமையால் கூட இவ்வாறு செய்பவன் அழிந்துபோவான். பாற்கடலில் தோன்றிய நஞ்சை உண்பதற்குச் சிவபெருமான் ஒருவரால்தான் முடியும்.

கண்ணன் கோபியரோடு நடித்துக் காட்டிய ராசலீலையாகிய தெய்வீக விளையாட்டைப்பற்றிப் படிப்பவரும், கேட்பவரும் மிகவுயர்ந்த பக்தியைப் பெறுவதோடு, காமமாகிய பெண்ணாசையை எளிதில் தம்மிடமிருந்து விரட்டிவிடும் ஆற்றலைப் பெறுவார்கள்.

நீங்கள் அனைவரும் கோபியரைப்போன்ற தீவிரப் பிரேமையுடன் இறைவனோடு உள்ளம் கலந்து, பிருந்தாவனமாகிய உங்கள் இதயங்களில் நாள்தோறும் ராசலீலையை நடத்துவீர்களாக!

## ராசலீலை

கோபியர்கள் ஒருவருக்கொருவர் கை கோர்த்துக் கொண்டு வட்டமாக நின்றார்கள். அந்த பக்தியும் வழிபாட்டுணர்வும் கொண்ட கோபியர்களோடு கண்ணன் ராசலீலையைத் தொடங்கினான்.

இரண்டிரண்டு கோபியர்களுக்கு நடுவில் நின்று கொண்டு யோகீஸ்வரனான கண்ணன் கோபியரின் வட்டத்தில் கோபியரின் தோள்களின்மீது தன் கைகளைப் போட்டுக் கொண்டு ராசலீலை என்னும் தெய்வீக விளையாட்டைத் தொடங்கினான். ஒவ்வொரு கோபியும் தன் அன்புக்குரிய கண்ணன் தனக்குப் பக்கத்தில் இருப்பதாக எண்ணிக் கொண்டாள்.

வானவீதியில் தேவர்கள் தங்கள் தேவியருடன் இரதங்களில் கூட்டங்கூட்டமாகக் கூடி நின்றார்கள். தெய்வீக நடனத்தைக் காண மிகவும் ஆவலுடன் இருந்தார்கள். முரசுகள் முழங்கின. மலர் மாரி பொழிந்தது. கந்தர்வர்களும் அவர்களுடைய மனைவிமாரும் கண்ணன் புகழைப் பாடத் தொடங்கினர். ராசலீலை வட்டத்தில் கொலுசுகள், வளையல்கள், சிறு சிறு மணிகள் ஆகியவைகள் ஒலிக்கத் தொடங்கின. கோபியர்கள் மன மகிழ்ந்தனர். அவர்கள் மனதில் வசுதேவ குமாரனாகிய கண்ணன் தங்கத்தினாலான மணிமாலையின் நடுவில் உள்ள மரகதக்கல் போன்று அழகுடன் பிரகாசிப்பதாக எண்ணி மகிழ்ந்தனர்.

அளவாகக் காலடிகள் எடுத்து வைத்து, அழகுடன் கைகளை அசைத்து மயக்கும் புன்னகையுடன், கண்ணிமைகளை மூடியும் திறந்தும் உடல்களை அசைத்து, காதணிகள் கன்னத்துடன் உரைந்து ஊசலாட மயிர்க்கற்றைகள் நெற்றியை மறைக்க, முகத்தில் வியர்வை வழிய, தலைமுடி அவிழ, கோபியர் பாடத் தொடங்கினர். நீல நிறமான மேகங்களுக்கிடையே பளீரென ஒளிவிடும் மின்னலைப் போன்று அழகுடன் விளங்கினார்கள். எங்கும் நிறைந்து ஒலிக்கும்படி குழலூதிய கண்ணனின் கரங்கள் தங்களைத் தொட்டவுடன் கோபியர்கள்

அளவுகடந்த மகிழ்ச்சியடைந்து. மிகவும் உரத்த குரலில் காதல் கீதங்கள் பாடத் தொடங்கினர்.

ஒரு கோபி கண்ணனுடன் சேர்ந்து எல்லா விதமான உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தக்கூடிய பாடல்களைப் பாடினாள். திடீரென்று உரத்த குரலில் அழகாக பாடத் தொடங்கினாள். இறைவனான கண்ணன் அவளை மிகவும் பாராட்டிப் பேசினான். அவள் மேலும் உற்சாகத்துடன் தன் குரலை துருவ தாளம் பாடுமளவுக்கு உயர்த்திக் கொண்டாள். மீண்டும் கண்ணன் அவளைப் பாராட்டினான்.

மற்றொரு கோபிகை நடனமாடும்போது களைத்துப் போனாள். அவள் கூந்தலிலிருந்து மல்லிகை மலர்கள் உதிர்ந்தன. கைவளைகள் கழன்றுவிழத் தொடங்கின. அவள் கண்ணன் கழுத்தைச் சுற்றித் தன் கைகளால் வளைத்துக் கொண்டு தனக்கருகில் இழுக்கத் தொடங்கினாள்.

இன்னொரு கோபி தன் தோளின்மேல் கிடந்த தாமரை மலரின் மணத்துடனும் பூசப்பட்ட சந்தனத்தின் மணத்துடனுமிருந்த கண்ணனின் கைகளை முகர்ந்துபார்த்து, அளவுகடந்த மகிழ்ச்சியினால் மயிர்க்கூச்செறிய அதை முத்தமிட்டாள்.

மற்றொரு கோபி நடனமாடும்போது ஏற்பட்ட அசைவுகளால் ஊசலாடிக்கொண்டிருந்த காதணிகளின் ஒளியால் அழகுடன் விளங்கும் கண்ணனின் கன்னத்துடன் தன் கன்னத்தைச் சேர்த்துவைத்துக் கொண்டாள்.

வேறொரு கோபி தன் காலணிகள் ஓசையிடக் கண்ணனின் அருகில் ஆடிக்கொண்டும் பாடிக் கொண்டுமிருந்தாள். அவளுக்குக் களைப்பேற்பட்ட

போது கண்ணனின் தாமரை மலரையொத்த கைகளைத் தன் மார்பின்மீது களைப்பைபோக்குமாறு அழுத்திப் பிடித்துக்கொண்டாள்.

இவ்வாறு கோபியர்கள் திருமகளின் மணாளனை அச்சுதனை அடைந்து, அவன் கைகளால் தழுவப்பட்டு அவனோடு ஆடிப்பாடிக் கொண்டிருந்தார்கள்.

காதுகளில் அணிந்திருந்த அல்லிமலர்களால் முகத்தின் அழகு அதிகரிக்கவும், காற்றில் அலையும் மயிர்க்கற்றைகளால் அவர்கள் நெற்றி மறைக்கப் பட்டும், முகத்தில் வியர்வைத் துளிகள் அரும்பவும், ராச லீலையின் அரங்கில் வண்டுகள் பாடவும், அவர் களுடைய கைவளைகளும் காலணிகளும் ஒலி எழுப்ப வும், புகழ்மிக்க இறைவனுடன் கோபியர்கள் நடனமாடினார்கள்.

கண்ணாடியில் தெரியும் உருவத்துடன் விளையாடும் குழந்தையைப்போல், அந்த அழகான பெண்களுடன் கண்ணன் விளையாடினான். கைகளால் அழுத்திப்பிடிப்பதாலும், அன்பான பார்வை யாலும், வெற்றியோடுகூடிய சிரிப்பாலும், மயக் கும் புன்னகையாலும் அவர்களை மகிழ்வித்தான்.

இறைவனுடைய உடல் தம்மீது பட்டபோ தெல்லாம் அவர்கள் புலன்கள் பூரித்தன. அவர்கள் அணிந்திருந்த மலர் மாலைகளும் அணிகலன்களும் கழன்று விழுந்தன. அவர்கள் கூந்தலையும் ஆடை களையும் கலையாமல் பார்த்துக்கொள்ள முடிய வில்லை. கண்ணனுடைய இந்த ராச லீலையைப் பார்த்த தேவ மாதர்கள் காதலினால் துன்புற்று மயங்கி வீழ்ந்தார்கள். சந்திரன், தன் பரிவாரங் களாகிய நட்சத்திரங்கள் புடைசூழ வந்தவன், அசையாமல் மயங்கி நின்றுவிட்டான்.

எப்பொழுதும் தன்னிடத்திலேயே நிலைபெற்று இன்புற்றிருக்கும் இறைவனும் எத்தனை கோபியர்கள் இருந்தார்களோ அத்தனை உருவங்களுடன் அவர்களுடன் ஆடிப்பாடி மகிழ்ந்தான்.

கோபியர்கள் ஆடிக்களைத்தபோது, தன்னுடைய மங்களகரமான கைகளால் அவர்கள் முகங்களில் அரும்பியிருந்த வியர்வையைத் துடைத்தான்.

கண்ணனின் கை கோபியரைத் தீண்டியதால் கோபியர் பெருமகிழ்ச்சி அடைந்தனர். கோபியர் பொன்னாலான காதணிகளின் ஒளியில் மின்னும் கன்னங்களுடனும், சுருண்ட முன்னுச்சிக் கூந்தலுடனும், மகிழ்ச்சி நிறைந்த பார்வையோடும், அமுதத்தைவிட இனிய புன்னகையோடும் கண்ணன் புகழைப்பாடி அவனுக்கு வணக்கம் தெரிவித்தார்கள்.

அதன் பின்னர் ஓர் ஆண் யானையானது பல பெண் யானைகள் புடைசூழ ஆற்று வெள்ளத்திலிறங்கி அணையை உடைத்துக்கொண்டு விளையாடுவதைப்போல், கண்ணன் புத்துணர்வு பெறவரும் கோபியர்களுடன் யமுனை நதியில் இறங்கினான். தேனீக்களும் அவன் புகழைப் பாடிக்கொண்டு கந்தர்வர்களைப் போலத் தொடர்ந்தன.

இளமங்கையரான கோபியர் கண்ணனை அன்புடன் பார்த்துப் புன்னகை செய்துகொண்டே அவன்மீது ஆற்று நீரை வாரி இறைத்தனர். வானவர்கள் ஆகாயத்தில் விமானத்திலிருந்துகொண்டே மலர்மாரி பெய்து அவன் புகழைப் பாடினர். தன் புகழை அடியவர் பாடக்கேட்டு இன்புறும் இறைவன், யானைக் கூட்டத்தின் தலைவனைப்போல் யமுனை நதியில் விளையாடினான்.

பின்னர் கண்ணன் யமுனை நதியிலிருந்து வெளிப்பட்டு தேனீக்களும் கோபியரும் புடைசூழ நதிக்கரையிலுள்ள காட்டில் நுழைந்தான். நீரிலும் நிலத்திலும் மலர்ந்திருந்த பூக்களின் நறுமணம் காற்றில் வீச, யானைக் கூட்டத்தின் தலைவனைப் போல விளையாடினான்.

முழு நிலா தன்னுடைய பால்போன்ற ஒளியை நிலத்தின்மேல் பரப்பிப் பிரகாசித்தது. கவிகள் வருணித்துள்ளபடியே இலையுதிர்கால இரவின் இயல்புகள் எல்லாம் நிறைந்து விளங்கின. தன்னிடம் பக்தி நிறைந்த கோபியர்களுடன் பிரகாசமான நிலவொளியில் கண்ணன் இரவுகளைக் கழித்தான்.

பரீட்சித்து மன்னன் சுகப்பிரம்ம முனிவரைப் பார்த்து, ''மா முனிவரே! உலகில் தருமத்தை நிலை நிறுத்தி அதருமத்தை அழிக்கவும் பகவான் தன்னில் ஒருபகுதியையே இங்கு அவதாரம் செய்ய அனுப்பினார். தருமத்தைத் தோன்றச் செய்தவரும், அதை உபதேசிப்பவரும், அதை அழியாமல் காப்பவரும் அவரே. அவர் மற்றவர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக நடந்துகொள்ள வேண்டும். அப்படியிருக்க பிறர் மனைவியரைக் காதலித்து அவர்களைத் தொட்டு விளையாடி தருமத்துக்கு விரோதமாக ஏன் நடந்துகொண்டார்? கண்ணபிரான் முறையே இல்லாதவர். அவர் விரும்புவதோ, அடைய வேண்டுவதோ எதுவுமில்லை. வெறுக்கத்தக்க ஒரு காரியத்தை அவர் செய்திருக்கின்றார். இந்த செய்யத்தகாத காரியத்தை ஏன் செய்தார்? அவருடைய நோக்கம் என்னவாக இருக்கும்? அருள் கூர்ந்து இந்த விஷயத்தைப்பற்றிய ஐயத்தைப் போக்கியருள வேண்டும்,'' என்று வேண்டிக் கொண்டார்.

''அரசே! சில சமயங்களில் உயிர்களுக்கு எல்லாம் இறைவன் கூட அறத்தை மீறிச் செயல்படுவதை நாம் காண்கிறேம். ஆனால் அதனால் அந்த உயிர்களுக்கு எந்தவிதமான தீங்கும் நேருவதில்லை. மிகவுயர்ந்த ஆன்மீக ஆத்மாக்களைப் பொருத்தவரை அவைகள் தீய செயல்களாக இருப்பதில்லை. நெருப்பு தீயவைகளை எல்லாம் விழுங்கிவிடுகிறது. ஆனால் அவைகளால் அது பாதிக்கப்படுவதில்லை. அது எப்போதும் தூய்மையாகவே இருக்கிறது.

ஆனால் பலவீனமான மனிதன் தன் ஆசையை வெற்றி கொள்ளாமலிருப்பதாலும், உடலிச்சைக்கு அடிமையாக இருப்பதாலும், அம்மாதிரியான செயல்களைப்பற்றி எண்ணவோ, அவைகளைச் செய்யவோ கூடாது. அறியாமையின் காரணமாக அம்மாதிரியான செயல்களை அவன் செய்வானேனால், அவன் அழிந்துபடுவான். எப்படியெனில் ருத்திரன் அல்லது பரமசிவனைத்தவிர வேறு எவரும் நஞ்சை உண்ட பிறகும் உயிரோடிருக்க முடியாது. பாற்கடலிலிருந்து தோன்றிய நஞ்சை பரமசிவன் ஒருவரால்தான் உண்ண முடியும்.

''தெய்வீக ஞானம் படைத்தவர்களின் சொற்களை சத்திய வசனங்களாகக் கருதவேண்டும். அவைகளுக்கேற்பவே மக்களின் ஒழுக்கமும் அமைய வேண்டும். அவர்களுடைய செயல்கள் சில சமயங்களில்தான் உண்மையாக இருக்கும். அவர்கள் அசாதாரண நிலைகளிலும் வழக்கத்திற்குமாறன முறையிலும் விசித்திரமான வாழ்க்கையை நடத்துகிறார்கள். சாதாரண மக்கள் அவைகள் எல்லாவற்றையும் எடுத்துக்காட்டாகக் கொண்டு பின்பற்றக்கூடாது. அறிவுள்ள ஒரு மனிதன் அவைகளிலுள்ள நீதிகளை அல்லது அறிவுரைகளையே பின்பற்ற வேண்டும். அவைகள் மக்களின் நன்மைக்காகவே நடைபெறுகின்றன.''

''அகந்தையை ஒழித்துவிட்ட ஒருவர் நல்லவை என்று விதிக்கப்பட்டவை என்ற செயல்களைச் செய்வதால் எவ்விதமான லாபமோ, தீயவை என்று குறிக்கப்பட்ட செயல்களைச் செய்வதால் எவ்வித மான நஷ்டமோ ஏற்படுவதில்லை.''

''அவர்கள் வாழ்க்கை நன்மைக்கும், தீமைக்கும், புண்ணியத்துக்கும், பாவத்துக்கும் அப்பாற்பட்டது. ஆற்றல்மிக்க மக்களின் நிலையே அத்தகையது என்றால் உயிர்களுக்கெல்லாம் இறைவனுக்கு நல்லது எது, தீயது எது? அழியக்கூடியவர்களான மனிதர்களும், அதற்குக் கீழ்நிலையிலுள்ள விலங்குகளும், இவ்வுலகிலுள்ள மற்ற உயிர்களும் இறையுணர்வோடுள்ள அல்லது மற்ற விஷயங்களைப் பற்றி அறியாமலிருப்பது ஒரு விந்தையானதல்ல. பிரபஞ்சத்தின் இறைவனின் நடத்தையைச் சாதாரண நிலையிலுள்ள மக்களுக்கான நன்மை, தீமை என்பவற்றைப்பற்றிய அளவுகோலால் தீர்மானிப்பது எப்படி முடியும்?''

''அவன் திருவடிகளில் பக்தி செலுத்துவதாலும், யோகத்தின் ஆற்றலாலும், ஞானிகளும் கூட நல்லது மற்றும் கெட்டது ஆகியவற்றின் பந்தங்களிலிருந்து விடுதலை பெறுகிறார்கள். அவர்கள் தங்கள் செயல்களின் பயனாலும், தர்மத்தின் பந்தத்தாலும் கட்டுப்படுவதில்லை. அவ்வாறிருக்க மனித குலத்தின் நன்மைக்காக தானே விரும்பி ஓர் உருவத்தைத் தாங்கி வந்துள்ள போற்றற்குரிய இறைவன் பந்தங்களுக்குக் கட்டுப்பட்டவன் என்று கற்பனையோடு எவ்வாறு எண்ணலாம்?''

''கோபியரின் உள்ளங்களிலும், அவர்கள் கணவன்மாரின் உள்ளங்களிலும், மற்றுமுள்ள உயிர்களின் உள்ளங்களிலும் அவன் வாசம் செய்கிறான். அவனே எல்லாவற்றையும் ஆள்கிறான். தன்னுடைய லீலை அல்லது விளையாட்டைக் காட்டவே

ஓர் உருவத்தைத் தாங்கி வந்திருக்கிறான். தன்னுடைய அடியவர்களுக்கு அருள்பாலிக்க, ஓர் உருவத்தைத் தாங்கி வந்து இந்த லீலைகளாகிய விளையாட்டுக்களை நடத்தினான். இவற்றைப் பற்றிக் கேட்கும் மனிதனுக்கு இறைவனிடம் பக்தி உண்டாகிறது.''

''பரீட்சித்து மன்னனே! விரஜா நகரத்து ஆண்கள் கண்ணனைப் பற்றிக் குறை கூறவில்லை. ஏனென்றால் இறைவனின் மிக மேலான யோக மாயையால் அவர்கள் மயங்கி தங்களுடைய மனைவிமாராகிய கோபியர் எப்போதும் தத்தம் அருகிலேயே இருப்பதைக் கண்டார்கள்.''

இரவு நேரம் முடிந்து, பொழுது புலரும் தருணமாயிற்று. கண்ணனிடம் பக்தியோடிருந்த கோபியர் அவனை விட்டுப் பிரிய சிறிதும் விருப்பமில்லாமலிருந்தும் அவனுடைய விருப்பத்திற்கிணங்க தத்தம் இல்லங்களுக்குச் சென்றார்கள்.

கோபியருடன் கண்ணன் நடத்திய இந்த தெய்வீக விளையாட்டைப் பற்றிக் கேட்கும் அல்லது படிக்கும் அல்லது விவரித்துச் சொல்லும் எந்த மனிதனும் இறைவனிடத்தில் தீவிர பக்தியுடையவனாக மாறி ஞானத்தை அடைந்து, உள்ளத்தை வாட்டும் காமமாகிய நோயினின்றும் விரைவில் விடுதலை பெறுவான். மனதிற்குத் துன்பம் கொடுக்கும் ஆசைகளை விரைவில் அழித்து விடுவான். தன்னையே அர்ப்பணித்துக் கொண்டு தன் உள்ளத்தை வாட்டும் துன்பங்களினின்றும் விடுபடுகிறான். அவன் புது உணர்வுத் தூண்டுதல்களினின்றும் நிரந்தரமாக விடுதலை பெறுவான்.

ஓம் தத் ஸத்!

# ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் போதனைகள்

நான்கு மணிக்கு எழுந்திருங்கள். ஜபம், தியானம், செய்யுங்கள்.

சாத்விக ஆகாரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். வயிறு நிறைய உணவு எடுத்துக் கொள்ளாதீர்கள்.

பத்மாசனம் அல்லது சித்தாசனத்தில் அமர்ந்து ஜபம் தியானம் செய்யுங்கள்.

உங்கள் வருவாயில் பத்தில் ஒரு பங்கினை அல்லது ரூபாய்க்கு பத்து பைசாக்களை தர்மம் செய்யுங்கள்.

தினசரி பகவத் கீதையில் ஒரு அத்தியாயம் படியுங்கள்.

வீர்ய சக்தியைக் காப்பாற்றுங்கள். தனியாகப் படுத்துத் தூங்குங்கள்.

புகை பிடித்தல், போதை தரும் பானம், உயர்தர உணவு இவைகளை விட்டு விடுங்கள்.

ஏகாதசி தினம் உபவாசம் இருங்கள் அல்லது பால் பழங்களை மட்டும் எடுத்துக்கொள்ளுங்கள்.

தினசரி 2 மணி நேரம் மௌனத்தையும், சாப்பிடும் பொழுது மௌனத்தையும் கடைபிடியுங்கள்.

எந்நிலையிலும் உண்மையே பேசுங்கள். கொஞ்சமாக இனிமையாகப் பேசுங்கள்.

தேவைகளை குறைத்துக் கொள்ளுங்கள். திருப்தியாக சந்தோஷமாக வாழ்க்கையை நடத்துங்கள்.

மற்றவர்களுடைய உணர்ச்சிகளை புண்படுத்தாதீர்கள். எல்லோரிடமும் அன்பாக இருங்கள்.

நீங்கள் செய்த தவறுகளை நீங்களே சிந்தித்துப் பாருங்கள்.

வேலைக்காரர்களையே நம்பி இருக்காதீர்கள். சுய தேவையை நீங்களே பூர்த்தி செய்து கொள்ளுங்கள்.

படுக்கையை விட்டு எழுந்தவுடனும் படுக்கைக்குச் செல்லும் முன்னும் கடவுளைத் தியானியுங்கள்.

உங்கள் கழுத்திலோ, அல்லது சட்டைப் பையிலோ ஜபமாலை ஒன்றை வைத்திருங்கள்.

தினசரி ஆன்மீக நாட் குறிப்பினை எழுதி வாருங்கள்.

---

# சுவாமி சிவானந்தர் தமிழ் நூல்கள்

* 1984-ம் ஆண்டு புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| | இந்து தர்மம் | விலை ரூ. 12–00 |
| | வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் .... | 12–00 |
| * | ஸமாதி யோகம் .... | 12–00 |
| | நீதிநெறிக் கதைகள் .... | 7–00 |
| * | இமயமலையின் வீரமுழக்கம் .... | 7–00 |
| | சுவாமி சிவானந்தரின் சுயசரிதை .... | 6–00 |
| | ஞானயோகம் .... | 6–00 |
| | தர்ம உபதேசம் .... | 5–00 |
| | சிவானந்தரின் சத்சங்க உபதேசங்கள் .... | 5–00 |
| * | யோகவாசிஷ்டக் கதைகள் .... | 5–00 |
| | எளிய யோக சாதனை .... | 4–00 |
| | மாணவர்கள் வாழ்வில் வெற்றி .... | 4–00 |
| | தினசரி வாழ்வில் யோகம் .... | 4–00 |
| | கர்ம யோகம் .... | 4–00 |
| | நன்னெறிக் கதைகள் .... | 4–00 |
| * | சாதன சதுஷ்டயம் .... | 4–00 |
| * | அன்பு, அஹிம்சை, தூய்மை .... | 4–00 |
| | வாழ்க்கையின் லக்ஷியம் .... | 3–00 |
| | சத்சங்கமும் ஸ்வாத்யாயமும் .... | 3–00 |
| | சங்கீர்த்தன யோகம் .... | 3–00 |
| | பெண்மணிகளுக்குப் பொன் மொழிகள் .... | 3–00 |
| | குரு தத்துவம் .... | 3–00 |
| | ஞான தீபம் .... | 3–00 |
| * | ஒளி சக்தி ஞானம் .... | 3–00 |
| | உபதேச மஞ்சரி .... | 2–00 |
| | சிவானந்த வாணி .... | 2–00 |
| | சிவானந்தர் மொழியமுதம் .... | 2–00 |
| | உருவ வழிபாடு ... | 2–00 |
| | தெய்வீக வாழ்க்கை (சுவாமி சிதானந்தா) .... | 5–00 |
| | இராஜயோகச் சொற்பொழிவுகள் ,, .... | 5–00 |
| | ஞானஒளிபெற நல்வழிகாட்டி ,, .... | 4–00 |
| | சீரிய வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டி ,, .... | 3–00 |
| | சிதானந்தரின் அருட் செய்தி ,, .... | 3–00 |
| | சிதானந்தரின் சத்சங்க உபதேசங்கள் ,, .... | 2–00 |
| | நித்திய நெறிகள் ,, .... | 2–00 |
| | மனித வாழ்க்கையின் குறிக்கோள் ,, .... | 1–00 |
| | சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 3–00 |